# ஒரு முழுமையான சுவை அனுபவத்தை எங்களைத் தவிர வேறு யாரால் தர இயலும்

ஆம், சுவையான ட்ரு பிஸ்கட்களைச் சுவைப்பதே தனி இன்பம், பல்சுவையும், மொரமொரப்பும் கொண்ட ட்ரு பிஸ்கட் வகைகளை அடிக்கடி சுவைக்கும் ஆசையை யாராலும் அடக்க முடியாது. முழுமையான இயற்கை உட்பொருளான தேன், குளுகோஸ், பால்-பவுடர், ஏலக்காய் சத்து, புத்தம் புதிய முற்றிய தேங்காய் முதலியவற்றைக் கொண்டு, நீண்ட பல பரிசோதனைக்குப்பின் தயாரிக்கப்படுவதால்தான் சீரிய பலவகைகளில் உங்களுக்கு கிடைக்கிறது ட்ரு பிஸ்கட்கள்.

**தேன்-குளுகோஸ்**

புஷ்டியான தித்திப்புச்சுவைதரும் தேன்-குளுகோஸ் பிஸ்கட் போதுமான அளவு தேனும் திரவ குளுகோசும் கலந்தது. ஒவ்வொரு பாக்கட்டும் 350 கலோரி சத்தியை அளிக்கிறது.

**நீஸ்**

சுவையான தேங்காய் பிஸ்கட் நீஸ். தேங்காயின் இயற்கைச் சுவையை உங்களுக்கு அளிப்பதற்கென்றே தாராளமாக புத்தம் புதிய முற்றிய தேங்காய் சேர்க்கப்படுகிறது.

**ஏலக்காய் 'கஸ்டர்ட்' க்ரீம்**

நினைத்தாலே நாவூறும், இயற்கையான ஏலக்காய் கலந்த, சுவையான கிரீம் பிஸ்கட். எந்த வகையில் பார்த்தாலும் சிறந்த கிரீம் பிஸ்கட் இதுதான்.

**மாரி**

காபி, டீ வேளைகளில் சேர்த்துச் சாப்பிடும் மிதமான தித்திப்புக் கொண்டது இது. எந்தவகை பானத்துடனும் சேர்த்துச் சாப்பிட மிகச் சிறந்தது.

**மேலும் பல வகைகளும் உண்டு**

மேற்சொன்ன எல்லாவகை பிஸ்கட்களுமே உயர்தர பாக்கிங் பொருட்களைக் கொண்டு பாக் செய்யப்படுகிறது.

பிஸ்கட்டின் மணம், மொரமொரப்பு, புத்தம் புதுத் தன்மை கெடாமல் இருக்கும் பொருட்டு மிக அதிக விலையுள்ள செலஃபேன் (Cellophane) பேப்பரை பிஸ்கட்கள் மீது படும்படியாக பாக்கிங் செய்வதில் அதிக அளவு உபயோகப்படுத்தும் ஒரே தயாரிப்பாளர் நாங்கள்தான்.

நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் முழுமையான சுவையூட்டும் ட்ரு பிஸ்கட் வகைகளைச் சுவைத்து அதன் சீரிய நல்ல தன்மைகளை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்.



## ட்ரு பிஸ்கட்கள்




நான்கு அகில உலக "மாண்டே" மெடல்களைப்பெற்றது.




தயாரிப்பாளர்:
இந்தியாவின் மிகநவீன
மான மாவு மில்லும்,
பிஸ்கட் பாக்டரியும்
இணைந்ததொழிற்குழுமம்

Headstart/ATM/10

## Kalki Shopping Page

# STANDARD

**குதூகலத் திருநாளாம் தீபாவளியின்**
**மகிழ்ச்சியையும், செழிப்பையும், புத்தாடை,**
**ஒளி. ஒலியின் மூலம் வெளிப்படுத்துகிறோம்.**
**மிகச் சிறந்த ஒளி, ஒலிக்கருவி**
**ஸ்டாண்டர்ட் டிவி.**

இதை உங்கள் குடும்பத்திற்கு அளிப்பதின் மூலம்
இம்மகிழ்ச்சியை இரட்டிப்பாக்குங்களேன்!

இத்தீபாவளியின் மகிழ்ச்சி நீடித்து
நிலவிடும் அதிசயத்தை உணர்வீர்கள்.

## Solid State TV




DEALERS

**Cool Aids,** 58, Kodambakkam High Road, Madras-600 024 (Ph: 423579), **Jayanthi Radio & Electricals,** 1/4-5, G. P. H. Road, Vellore (Ph: 22995), **Kundamals Radio House,** 165/168, Devaraja Mudali Street, Madras-600 001 (Ph: 30321), **M. N. Electronics,** Royapettah High Road, Madras-600 004 (Ph: 74842), **RAEC,** 85, Mount Road, (next to Buhari), Madras-600 002 (Ph: 810237), **Suki Electronics,** 16, Veeraraghavan Street, Nanganallur, Madras-600 061 (Ph: 433019) **Television & Electronics Services,** 5, Thirumalai Pillai, Road, Madras-600 017 (Ph: 441758) **National Radio Sales & Service,** 40, Mint Street, Madras-600 001 (Ph: 37703)

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

இன்றே வாங்குங்கள்
விலை குறைக்கப்பட்டுள்ளது!
மக்கள் விரும்பும் மகத்தான
மின்விசிறி
**நோவா** ஸ்டார்



5 வருட
உத்திரவாதம்
உள்ளவை

**உம்பிச்சி ஏஜன்ஸீஸ்**
நெ. 1, சத்தண்ண நாயக்கன் தெரு,
(நேரு டிம்பர் மார்க்கெட்)
சென்னை-600 007. போன்: 33502

உங்கள் சருமத்தின் மென்மைக்கும்,
நறுமணத்திற்கும்
காந்தி கிராம் அளிக்கும்




வேப்பெண்ணெயின்
அருங்குணங்கள் நிறைந்த
**குடீர்** டாய்லட் சோப்



தயாரிப்பு:
காந்தி கிராம் கதர்
கிராமத் தொழில் ட்ரஸ்ட்
காந்தி கிராம் 624 302

விற்பனை:
காதி கிராமோத்யோக் பவன்
சென்னை 600 002

பண்டிகை மற்றும் திருமண விழாக்காலங்களுக்கு



# காஞ்சி சில்க் பாலஸ்

அளிக்கும்

காஞ்சிபுரம், ஆரணி, தர்மாவரம்

கண்கவர் **அசல் பட்டுச் சேலைகள்**

நவீன ரகங்கள் • கவர்ச்சி மிகு வண்ணங்கள் உயர்ந்த தரம் • நீடித்த உழைப்பு
விலையோ நியாயமானது.

அனைத்து விழாக்கால பரிசளிப்பிற்கு உகந்தது.

எல்லா பிரபல மில் துணி வகைகள், கைத்தறி துணி ரகங்கள் நிறைந்த இடம்.




# காஞ்சி சில்க் பாலஸ்

6/53, பாண்டி பஜார், தி.நகர், சென்னை-600017.

**எல்லா சேலைக்கும் ஏற்ற ரவிக்கை வகை கிடைக்கும்**

# இன்றையச் சூழ்நிலை!

## மேதகு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி

இந்தியாவின் இன்றைய நிலைமையை மேலெழுந்தவாரியாகப் பார்ப்போம். பொது வாழ்வில் அருவருப்பான அம்சங்களின் எல்லைகளையே தினமும் பார்க்க வேண்டியிருக்கிறது என்று மக்கள் புகார் செய்கிறார்கள். மிகுந்த மனச் சோர்வும் ஏமாற்றமும் நிலவுகிறது.

ஒரு பக்கம் நமது தேசம் பண்பாடு, நாகரிகம், நல்லொழுக்கம் முதலியவற்றில் மிக உன்னதமான பாரம்பரியத்தைப் பெற்றுள்ளதைக் காண்கிறோம். வேத காலம் தொட்டு [illegible]ப காலத்திய ராமகிருஷ்ணர், விவேகானந்தர் வரை இப்பாரம்பரியம் நீடிக்கிறது. அதன் பின்னர் மகாத்மா காந்தியும் தோன்றினார். உலகம் முழுவதும் அவரை யுக புருஷராகக் கருதுகிறது. தர்மத்தை நிலைநாட்ட, அதர்மத்தை அழிக்கத் தோன்றிய அவதாரமாக அவரை எண்ணுகிறது. அவர் சகலத்துக்கும் வழிகாட்டியுள்ளார். இருப்பினும் இன்றைக்கு நமது வாழ்வு துண்டு துண்டாகச் சிதறுண்டு கிடக்கிறது. காந்தியுடன் சேர்ந்து பணியாற்றிய சிலர் உள்பட, ஏராளமான தலைவர்கள் உபதேசிப்பது ஒன்றும் செய்வது ஒன்றுமாக இரட்டை வாழ்வு நடத்துகிறார்கள். முடிவுகளுக்கும் முடிவுகளை அடைவதற்குரிய மார்க்கத்துக்கும் பொருத்தமின்றி இடைவெளி அதிகமாகியுள்ளது. அரசியலில் வார்த்தை ஜாலம் செயல் திறனின் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. சொந்த லாபங்கள் பொது நலனின் இடத்தைப் பற்றிக் கொண்டுள்ளது. தேசபக்தியின் இடத்தை அதிகாரத்தைக் கைப்பற்ற நடக்கும் மோசமான சூழ்ச்சிகள் அபகரித்துக்கொண்டுள்ளன. நாளிதழ் பக்கங்களில் பாதிக்கு மேல் மக்கட் பிரதிநிதிகள் கட்சி மாறுவதைப் பற்றிய செய்திகளே திணிக்கப்பட்டுள்ளன. அவர்களில் பிரபலமான பலர், அனைவரும் அறிந்த தங்கள் நிலையிலிருந்து மாறி, பல குட்டிக்கரணங்கள் போடுவதைப் படிக்க முடிகிறது. அதிகாரமும் பதவியும் பெறுவதற்காக நேர்மையற்ற, அசிங்கமான பல ஆட்டங்கள் பகிரங்கமாக நடக்கின்றன.

நமது அரசியல்வாதிகள் பணத்துக்கு அடிமையாகிவிட்டனர். அதுவும் பெரும்பாலும் கறுப்புப் பணத்துக்கு. ஏராளமான அரசியல் வாதிகள் பணம் குவிப்பவர்களாகி விட்டார்கள்! அவர்களுக்குத் தேர்தலுக்காக அம்பாரம் அம்பாரமாகப்பணம் தேவைப் படுகிறது. கறுப்புப் பணம், அரசியல் இயந்திரம் தங்கு தடையின்றி இயங்கப் போடப் படும் கிரீஸ் போன்றதாகி விட்டது. வியாபாரச் சமூகத்தினர், தேர்தல் நிதி அளிக்குமாறு அரசியல்வாதிகளால் தாங்கள் வற்புறுத்தப்படுவதாகவும் நிர்ப்பந்திக்கப்படுவதாகவும் சில சமயம் பயமுறுத்தப்படுவதாகவும் புகார் செய்கின்றனர். இதன் விளைவாக கறுப்புச் சந்தையும், லஞ்சமும் எவரெஸ்ட் சிகரம் அளவு உயர்ந்து விட்டது. ஏறத்தாழ இவற்றைச் சம்பிரதாயமாக அங்கீகரிக்கும் அளவுக்கே கூடச் சென்று விட்டோம். இவையெல்லாம் சேர்ந்து விலைவாசிகளை ஏகமாக உயர்த்திவிடச் சராசரி மனிதன் அவதிப்படுகிறான். இந்தச் சூழ்நிலையில் தேர்தல் முறை மாற்றியமைக்கப்பட வேண்டும் என்று பலமான கோரிக்கை எழுந்துள்ளது. நேர்மையும் நல்லொழுக்கமும் உள்ள வேட்பாளர்கள் தேர்தலில் இடம் பெற வேண்டும் என்று மக்கள் விரும்புகின்றனர்.

தொழில் வர்த்தக நிறுவனங்களும் அறக்கட்டளைகளும் வரவு செலவுகளைக் காட்டுவது போல் அரசியல் கட்சிகளும் தங்கள் வரவு செலவை ஆண்டுதோறும் பிரகரிக்கும்படி செய்தால் பல தீமைகளைக் கட்டுப்படுத்தலாம். பல தலைவர்கள் கறுப்புப் பணம், லஞ்சம் போன்ற அநியாயமான வழிகளைக் கையாண்டு தேர்தலில் வெற்றி பெறும்போது நமது தேசம் எப்படி முன்னேற்றமும் சுபிட்சமும் அடைய முடியும் என்று மக்கள் கவலைப்படுகிறார்கள்.

ஒரு தேசத்தின் குண நலனை நிர்ணயிப்பது அதன் மக்களுடைய நேர்மைதான். 'ஒரு மனிதனின் திறமையைக் கவனியுங்கள்; அவனுடைய சொந்த வாழ்க்கை பற்றிக் கவலைப்படாதீர்கள்' என்று நமது நண்பர்கள் பலர் கூறுவார்கள். ஆனால் மேல் நாடுகளைப் போலன்றி நமது பாரம்பரியங்களும் தராதரங்களும் வித்தியாசமானவை. இங்கே ஒழுக்கம் யதார்த்த ரீதியிலும் மனத்தளவிலும் முக்கியத்துவம் பெறுகிறது. ஒழுக்கமின்றி, திறமை மட்டும் இருப்பது எப்போதுமே சமூகத்துக்கு ஆபத்தானது. பல தலைவர்கள் மூடப்பட்ட கதவுகளுக்குப் பின்னால் தாங்கள் செய்வதை யாரும் அறிய மாட்டார்கள் என எண்ணுகிறார்கள். அவர்கள் தவறான கருத்துக் கொண்டிருக்கிறார்கள். பொது மக்களின் கண்களும் செவிகளும் கூர்மையானவை. எச்சரிக்கையுடன் இருப்பவை. ஊடுருவக் கூடியவை. அவை செங்கல் சுவர்களையும் கண்ணாடிச் சுவர்களாக்கிவிடும்.

கல்வித் துறையில் கூட லஞ்ச ஊழலும் நேர்மையின்மையும் பரவலாக இருப்பதாகவும், அநியாய முறைகள் கையாளப்படுவதாகவும் பொது மக்களிடமிருந்து புகார்கள் வருகின்றன.





# நீங்காத நினைவுகள்

அமரர் கல்கிக்குப் பிறகு சில காலம் இப்பத்திரிகையின் ஆசிரியராக இருந்த திரு மீ. ப. சோமு, கவிதை, சிறுகதை, இசைப் பாடல், நாவல், இலக்கியம், பயண நூல் முதலிய பல துறைகளிலும் சிறந்த படைப்புக்களை ஆக்கித் தந்து கல்கி வாசகர்களைப் பெரிதும் கவர்ந்துள்ள முன்னணி எழுத்தாளர். ராஜாஜியோடு சேர்ந்து இலக்கிய நூல்கள் எழுதும் அரிய வாய்ப்பைப் பெற்றவர். டி.கே.சி., ராஜாஜி, கல்கி போன்ற அறிஞர்களுடனும், ராஜரத்தினம் பிள்ளை ஜி. என். பி. போன்ற இசை மேதைகளுடனும், நாவலர் சோமசுந்தர பாரதியார், மகா வித்வான் சிதம்பர ராமலிங்கம் பிள்ளை, பண்டித ஆண்டியப்ப பிள்ளை போன்ற பழம் பெரும் புலவர்களுடனும் நெருங்கிப் பழகியவர். மறுமலர்ச்சித் துறையிலே புரட்சி மன்னராக விளங்கிய புதுமைப் பித்தனுக்கு நெருங்கிய நண்பர். கடந்த நாற்பது ஆண்டுகளாக அகில இந்திய வானொலியில் பல முக்கிய பதவிகள் வகித்து வருபவர்.

பல துறைகளிலும் அவர் பெற்றுள்ள அனுபவ நிகழ்ச்சிகளை 4–11–79 இதழிலிருந்து கல்கி வாசகர்களோடு பகிர்ந்து கொள்கிறார் என்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

---

லட்சிய நோக்குடைய அதற்காகத் தங்களையே அர்ப்பணித்துக் கொள்கிற ஆசிரியர்கள் குறைவு. அப்படி இருக்கிற சிலருக்கும் நடைமுறை விவகாரங்களில் செல்வாக்கு இல்லை. நியமனங்கள், கல்விக் கூடங்களில் சேர்வதற்கான அனுமதிகள், பரீட்சைகள் முதலியவற்றில் வெட்கமோ பயமோ இன்றிக் கணிசமான அளவில் மோசடிகள் நடப்பதாகப் புகார் செய்யப்படுகிறது. கேள்வித்தாள்கள் விற்கப்படுவதாகப் பலதடவைகளில் செய்தி வெளியாகிறது. ஒட்டு மொத்தமாக அனைவரும் காப்பி அடிப்பது சகஜமாகி விட்டது. மார்க்குகளை விலைக்கு வாங்கி விடுவது சாத்தியமாகி விட்டது. கல்விக் கூடங்களுக்குப் பொறுப்பேற்ற தலைவர்களிடத்தில் ஒழுக்கமின்மை என்பது வேதனை அளிப்பதாகும். சரஸ்வதியின் கோயில்களில் இதைப் பொறுத்துக்கொள்ள முடியாது.

இந்த அரசியல்வாதிகள், கல்வியாளர்கள் எல்லோரும் உடனே மாறித் தங்களைத் தாங்களே உயர்த்திக்கொள்ள இன்னமும் நேரம் இருப்பதாக நான் கருதுகிறேன். அவர்கள் மாறாவிட்டால் சமூகம் அவர்களுக்குப் பாடம் கற்பிக்கும். அவர்களை மாறுமாறு கட்டாயப்படுத்தும். அவர்கள் இதற்கான முன்னறிவிப்புகளை இப்போதே காண முடியும்:

''காலா காலத்தில் அவர்கள் விழித்துக் கொள்ளவில்லையெனில், விழித்துக்கொண்ட — ஆனால் புறக்கணிக்கப்பட்டு அறியாமையில் உழல்கின்ற கோடிக்கணக்கானவர்கள் இந்த நாட்டை ஒரு நிலையில் ஆழ்த்திவிடுவார்கள்: அதனை ராணுவமும் தவிர்க்க முடியாது!''

இந்தத் தேசத்தில் தன்னலமற்ற, கடமையே கண்ணாயிருக்கிற தேசபக்தர்கள், சமூக ஊழியர்கள், கல்வியாளர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் சக்தியை வெளிக்காட்டி ஸ்திரப்படுத்திக் கொள்ளாமல் நடப்பனவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டு பேசாமல் சகித்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் ஒன்றுசேர்ந்து ஒரு நல்லமைப்பாக விளங்கித் தங்கள் கருத்தை வலியுறுத்த இனியேனும் தாமதிக்காமல் செயல்பட வேண்டும். சமூக வாழ்வின் நல்ல அம்சங்கள், நேர்மை, நல்லொழுக்கம் முதலியவை மறுபடியும் நிலைநாட்டப்படுவதைக் காண்பது பொறுப்புள்ள பிரஜை ஒவ்வொருவனுக்கும் கடமையாகிறது. இதற்காக அவன் தன்னை உசுப்பி விட்டுக் கொண்டு செயல்பட வேண்டும். நடப்பனவற்றைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருப்பது அழகல்ல. இந்நிலை நீடித்தால் நடக்கின்ற பயங்கரக் குற்றங்களுக்கு அவர்களும் உடந்தையாக இருந்தது போலாகும்.

முன் காலத்தைப் போலல்லாது இந்நாளில் வழக்கறிஞர்கள் பலர் பொது வாழ்வில் ஈடுபட முன்வருவதில்லை. இது துரதிர்ஷ்ட வசமானது. அவர்களுக்குச் சட்டம் நன்கு தெரியும்; அலசிப் பார்க்கும் ஆற்றல் உண்டு; பிரச்னைகளை யதார்த்த ரீதியில் அணுகுவார்கள்; பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதில் வல்லவர்கள். மேலும் மேலும் பல வழக்கறிஞர்கள் விழித்தெழவும் சிலிர்த்தெழவும் வேண்டும். சமூகம் பல்வேறு தீமைகளால் தாக்கப்படுவதை எதிர்த்துப் போராட வேண்டும்.

நமக்கு ஆறுதல் அளிக்கும் ஒரு பெரிய விஷயம் உள்ளது. அது இந்தியாவிலுள்ள சராசரி மனிதன் அமைதியை விரும்புகிறவன், நன்னடத்தை உடையவன் என்பது தான். இச்சமூகம் நல்லதாகவும் தாராள மனமுள்ளதாகவும் இருப்பதால் இன்றுள்ள நிலையைப் பொறுத்துக் கொள்கிறது. ஆனால் அதனை ரொம்பவும் சோதித்துத் தூண்டிவிட்டால் அது இனியும் மௌனமாய் இராது. தீமைகள் வளர விடாமல் தடுக்க மக்களுக்கு ஆற்றல் உண்டு. நாம் அனைவரும் தன்னலமற்று மனப்பூர்வமாகப் பொதுஜன அபிப்பிராயத்தை விழித்தெழச் செய்வோம். அதன் மூலம் நேர்மையையும் தார்மீக மதிப்புக்களையும் நல்லொழுக்கத்தையும் புனர் நிர்மாணம் செய்வோம். விழித்தெழுந்த பொதுஜன அபிப்பிராயத்துக்கு அளப்பரிய சக்தி உண்டு. அது பிரகாசமாகப் பளபளக்கும் ஒரு சகாப்தத்தை உருவாக்கி வரவேற்கும்.

தமிழாக்கம்: கி. ரா:

ஒரு ஜேம்ஸ்பாண்ட் திரைப்படத்தைப் பார்ப்பது
போன்ற விறுவிறுப்பான நடையில்

மதஞ மிருத்தியுஞ்சயன் எழுதும்

# முற்றுப் பெறாத பாக்கியங்கள்

தொடர் கதை

**கல்கி**
நவம்பர் 4ம்
இதழில்
ஆரம்பம்



## ரஜனிகாந்த் ☆

— உங்கள் இல்லத்தில்!
வரவேற்கத் தயாராகுங்கள்!

**கல்கி** வழங்கும்
முதல் **BLOW UP POSTER**
நவம்பர் 4ம் இதழுடன்.
தனியே எடுத்து வீட்டின் சுவரை
அலங்கரிக்கலாம்.
பின்புறம்: பொழுது போக்கு அம்சங்கள்!


ஒரு தரம் தானே எழுதி இருக்கே... நூறு தரம் எழுதச் சொன்னேனே...?
நான் இந்திராவுடன் சேர மாட்டேன்
மனச் சாட்சி




நாங்க பதவிக்கு வந்தா விசாரணைக் கமிஷன்களை ஒழிப்போம்!
அது கிடக்குது.. மொதல்லே நீங்க ரெண்டு பேரும் ஏன், எதுக்கு, எப்படி கூட்டு சேர்ந்தீங்கங்கிறதுக்கு ஒரு விசாரணைக் கமிஷன் வைக்கணும்!
வாக்காளர்


கா.கா..
நெடுமாறன்


கா.கா.கா.
குமரி அனந்தன்


காகா..காகா
கா கா கா கா கா கா
கா கா கா கா கா கா கா



X-RAY

# சௌதுரி சரண்சிங்

சுதந்திர இந்தியாவின் ஆறாவது பிரதமர்; ஒரு விவசாயி; தமது அரசியல் வாழ்க்கையில் மிக உயர்ந்த பதவியை அளித்த ஜனதா கட்சியை உடைத்துவிட்டு குறுக்கு வழியில் பிரதமர் பதவிக்கு வந்தவர். அதிலும் பாராளு மன்றத்தின் பெரும்பான்மை பலம் இல்லாமலே பிரதமராக்கப்பட்டு, பாராளு மன்றத்தைச் சந்திக்காமலேயே பதவியில் நீடிக்கும் பாக்கியம் பெற்றவர்; மேற்கு வங்காளத்தையும் கேரளாவையும் ஆட்டிப் படைத்த (படைக்கும்) கூட்டணி ஆட்சி முறையை முதன் முதலாக மத்திய அரசுக்குக் கொண்டு வந்து இந்திய அரசியலின் எதிர்காலத்தை ஒரு கேள்விக் குறியாக்கும் நற்பணியைச் செய்தவர். — இவையெல்லாம் இன்றையப் பாரதப் பிரதமர் சௌத்ரி சரண் சிங்குக்கே உரித்தான தனிப்பெரும் சொத்துக்கள்.

சிரிப்பென்றால் என்னவென்று கேட்கும் முகம். அதில் தூங்குவது போன்று எப்போதும் பாதி மூடிய நிலையிலேயே இருக்கும் விழிகள். 'கட்டின துணியைக் கூட நம்ப மாட்டேன்' என்பது போன்றதொரு முக பாவம்.

பிடிவாதமும் முரட்டுத்தனமும் இவரது ரத்தம் என்றால், பதவி மோகம் இவரது ரத்தத்தின் சிவப்பு அணுக்கள்.

அடிக்கடி புதிது புதிதாகக் கட்சிகள் ஆரம்பிப்பது என்றால் இவருக்குப் பரமகுஷி. ஆனால் அடிப்படைக் கொள்கை இல்லாமல் புதிய கட்சியைத் தொடங்க மாட்டார். அந்த அடிப்படைக் கொள்கை என்னவென்றால், பதவி மோகம்தான்!

1927லிருந்து 1967 வரை இவர் காங்கிரஸிலேயே இருந்திருக்கிறார் என்பதை அறியும்போது, அது ஓர் உலக மகா அதிசயமாகப்படுகிறது!

1967ல் காங்கிரஸிலிருந்து வெளியேறியதிலிருந்து சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி, பாரதிய கிராந்தி தளம், பாரதிய லோக் தளம், ஜனதா கட்சி, ஜனதா(எஸ்) கட்சி, சமீபத்தில் லோக் தளம் — போன்று ரக வாரியாக இவர் கட்சிகளைத் தொடங்கியவர். 'லோக் தளம்' தொடங்கப்பட்ட அன்று 'அக்கட்சியின் தலைவர் பதவி தமக்கு வேண்டாம்' என்று முதலில் 'பாவ்லா' காட்டிவிட்டுப் பிறகு அப்பதவியை ஒப்புக்கொண்டது சமீப காலத்து நாடகக் காட்சிகளில் சிறப்பான ஒன்றாகும்.

இவருக்கும் இவரது சீடன் ராஜநாராயணுக்கும் நம்பியவரை நட்டாற்றில் விடுவதென்றால் ரொம்பவும் பிடிக்கும். தங்களுக்குள்ளேயே கூட இவ்விளையாட்டை இருவரும் விளையாடிக் கொள்வதுண்டு.

முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதிலும் நடந்து கொள்வதிலும் சரண் சிங்குக்கு நிகர் சரண் சிங்தான். மொரார்ஜிக்கு முழு மனதுடன் ஆதரவு தருவதாகச் சொன்னது; இந்திரா காந்தியின் பரம வைரியாகத் தம்மைக் காண்பித்துக் கொண்டது பின்னர் இவ்விஷயங்களில் குட்டிக்கரணங்கள் போட்டது போன்று பல உதாரணங்களைச் சொல்லலாம்.

ஒரு வழக்கறிஞரான இவர் கண்டுள்ள அரசியல் பதவிகள்: உத்தரப் பிரதேச சட்டசபையில் பார்லிமெண்டரி செக்ரட்டரி, மாநில அமைச்சர், மாநில முதன் மந்திரி, மத்திய அமைச்சர், மத்திய உதவிப் பிரதமர், பிரதமர் ஆகியவை. பதவியைக் கைப்பற்றுவதில் நேர்மை இல்லாவிடினும், நிர்வாகத்தில் நேர்மையானவர் என்று கூறப்படுகிறது. ஆனால் நேர்மை என்பது வேறு, திறமை என்பது வேறு அல்லவா?

இவர் புலால் உண்பதில்லை. சிகரெட், மது போன்ற எப்பழக்கமும் கிடையாது. எளிமையானவர் என்று எண்ணச் செய்யும் திறமை உள்ளவர். இந்த உத்தரப் பிரதேச சிங்கத்தை காங்கிரஸ் கூண்டுக்குள் அடைத்து வைத்திருந்த பெருமை நேருவுக்கு உண்டு. நேரு இவரைப் பற்றிச் சொன்னது: ''சரண் சிங் பதினேழு அல்லது பதினெட்டாம் நூற்றாண்டில் பிறந்திருக்க வேண்டியவர்!''

பி. ரங்கநாயகி

அட்டைப்பட கார்ட்டூன்: நடனம்

'தர்ம சங்கடம்' — தம்பு!









# கல்கி

1979 அக்டோபர் 21
சித்தார்த்தி ஐப்பசி 4
மலர்: 38 இதழ்: 12




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# யுக புருஷர்

"சாதுக்களை ரட்சிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தண்டிப்பதற்காகவும் தர்மத்தை நிலைநாட்டவும் ஒவ்வொரு யுகத்திலும் நான் அவதாரம் பண்ணுகிறேன்" என்றார் பகவான். அப்படிப்பட்ட யுக புருஷர்களாக, அவதாரம் பண்ணினவர்களாக எண்ணப்படக் கூடியவர்களுள் ஜெயப்பிரகாஷும் ஒருவர்.

தமது வாழ்நாளிலேயே அவர் பல அற்புதங்களைச் செய்து காட்டினார். பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் விடுதலைப் போரில் ஈடுபட்டு வியத்தகு சாகஸங்களை நிகழ்த்தினார். ஆனால் அவற்றை விடவும் தேச விடுதலைக்குப் பிறகு அவர் நிகழ்த்திய அற்புதங்கள் அவரை அவதார புருஷர் என்று நிரூபித்துக் காட்டுகின்றன. இவற்றுள் முதலாவது அவர் பதவி ஆசை சிறிதும் இன்றி ஒதுங்கி இருந்ததாகும். அப்படி இருந்ததாலேயே அவர் ஒரு தனித்துவமும் ஆட்சியை விமர்சிக்கும் துணிவும் தகுதியும் பெற்றார். நேருஜியுடனேயே கருத்து மாறுபட்டுப் பேசவும் எழுதவும் கடிதத் தொடர்பு கொள்ளவும் அவரால் முடிந்தது. இவ்விதம் ஜனநாயகத்துக்கு இன்றியமையாத விமர்சனப் பணியைச் செய்து அதனை எவ்வாறு கண்ணியமாகச் செய்ய வேண்டும் என உணர்த்தினார்.

வினோபாஜியின் பூதான சர்வோதய இயக்கத்துக்கு அவர் புத்தொளியும் புதிய ஜீவனும் அளித்தார். சம்பல் பள்ளத்தாக்குக் கொள்ளைக்காரர்களை அவர் அன்பினால் வென்றதை உலக மகா அதிசயமாகச் சரித்திரம் பேசும்.

அவரது வாழ்நாளின் சிகரமான பணி அவரது முதுமைப் பிராயத்தில்தான் நிகழ இருந்தது. "பிரிட்டிஷ் சர்வாதிகாரத்தை எதிர்த்துச் சிரமப்பட்டு நாம் வெற்றி பெற்றுவிட்டோம். ஆனால் நம்மவர்களே சர்வாதிகாரிகளாக விளங்கினால் அவர்களை வெற்றி காண்பதென்பது அதைவிடக் கஷ்டமானது" என்றார் ராஜாஜி. நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்கு முன்பே ஆட்சியின் சர்வாதிகாரப் போக்கை உணர்ந்து தீர்க்கதரிசனத்துடன் எழுதினார். அந்த மிகக் கஷ்டமான காரியத்தைச் செய்து வெற்றி கண்டு, மாபெரும் சாதனை புரிந்தார் ஜே. பி.

"கம்யூனிஸ்டுகள் நீங்கலாக எதிர்க் கட்சியினர் எல்லோரும், அனைவருக்கும் பொதுவான கொள்கைகள் சிலவற்றை வகுத்துக் கொண்டு அவற்றின் அடிப்படையில் ஒன்றுபட வேண்டும். இல்லையெனில் இந்த நாட்டைக் காங்கிரஸின் சர்வாதிகாரப் போக்கிலிருந்து மீட்க முடியாது" — இதுவும் ராஜாஜியின் அறிவுரை, விருப்பம். ஆனால் அவர் காலத்தில் இது நிறைவேறவில்லை. பின்னால் நிறைவேற்றிக் காட்டியவர் ஜே. பி. இதனால் உடனடியாக நற்பலனும் விளைந்தது. வோட்டுக்கள் சிதறுண்டு போகாமல் காத்ததில் சர்வாதிகாரம் படுத்துவிட, ஜனநாயகம் பிழைத்தது! இந்த இரண்டாம் விடுதலைப் போரின் தன்னிகரில்லாத் தானைத் தலைவராக விளங்கினார் ஜே. பி.

இதன் பின் பல ஏமாற்றங்களும் அவருக்கு ஏற்பட்டது நமக்குத் தெரியும். இதனால் அவருக்கு உண்டான மனக் கஷ்டம் நோய் கொடுத்த சரீர வேதனையை விட அதிகமாகத்தான் இருந்திருக்கும். ஆனால் அவதார புருஷர்கள் பலருக்கும் சாதனைகளுக்குப் பிறகு இத்தகைய ஏமாற்றங்களும் நிகழும் என்பதை இதிகாசங்கள் எடுத்துக் காட்டி அதற்கும் நம்மைத் தயார்ப்படுத்துகின்றன. யாதவ குலத்தவர் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு கிருஷ்ண பரமாத்மாவுக்குச் சொல்லொணாத் துயரளித்தார்கள். இராமன் பிரஜைகளிடம் ஏமாற்றமடைந்தான்; அது காரணமாய் ஜானகியை மீண்டும் வனவாசத்துக்கு அனுப்பிவிட்டுத் துக்கித்தான். ஜே. பி.யும் தாம் உருவாக்கிய ஜனதா கட்சி, தம்மெதிரேயே பதவிப் போட்டி, பொறாமை காரணமாய் ஆற்றலின்மையை வெளிப்படுத்திப் பிளவுபடுவதைக் கண்டு மனம் நொந்தார்.

ஜே. பி. போன்ற மகான்களின் மரணம் நமக்குத் துயரளித்தாலும் அதே சமயம் அதிலிருந்துமே பல நன்மைகள் விளையும். மனச்சாட்சிகள் விழித்துக்கொள்ளும். மங்கலங்கள் பிறக்கும். ஜே. பி.க்காக நாம் கண்ணீர் உகுக்க வேண்டாம், அந்தக் கண்ணீர் நந்நீராக நம் இதயத்துக்குள் சொரியட்டும். அங்கே மனச்சாட்சிகள் புனிதப்படட்டும். நம்பிக்கையுடன் எதிர்காலத்தை நோக்குவோம்.

புகைப்படம்: நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ்

# பூக்குழி

## லக்ஷ்மி



9

பஞ்சாரத்தினத்தின் உடல் நிலை விரைவில் அபிவிருத்தி அடைந்து விடவே வைத்தியர் அவனுக்கு விதித்திருந்த கட்டுப்பாடுகளைத் தளர்த்தி விட்டிருந்தார்.

அன்று காலை அவன் படுக்கையிலிருந்து எழுந்து மருமகள் உதவியுடன் தலைமுழுகி விட்டு — காப்பிப் பலகாரத்துக்குப் பின் ஹாலில் கிடந்த சோபாவின் மீது சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தான்.

முன்னைவிட பார்வை மிகவும் மோசமாகி விட்டதை அவன் புரிந்து கொண்டு விட்டிருந்தான். முன்பெல்லாம் கண்முன் ஒரு வெள்ளைப் படுதா விரித்திருப்பது போன்ற உணர்வு இப்போது அது கருமையாகி விட்டது போன்றதொரு கலவரம் அவனுக்கு.

இலேசான காலடி ஓசையைத் தொடர்ந்து கும்மென்ற மல்லிகையின் மணம் முகத்தில் மோதவே அவன் மெல்லத் திரும்பினான்.

நீண்ட கூந்தலை வாரி அழகாகக் கொண்டை விட்டுக் கொண்டு அதைச் சுற்றிலும் பூரணி தொடுத்துக் கொடுத்த தோட்டத்து மல்லிகையைச் சூடிக் கொண்டு அகல்யா புடவை நுனியை இடுப்பில் தூக்கிச் சொருகிக் கொண்டு சாமான் அறைக்கும் — சமையலறைக்குமாக நகர்வதை அவனால் உருவகித்துக் கொள்ள முடிந்தது.

'மகன் வருவதற்குள் உடம்பு குணமாகி விட்டது போல் டாக்டர் மகராஜன் ஆபரேஷன் செய்து கண் பார்வையை ஒரு துளியளவு சீராக்கித் தந்து விட்டால்....'

''அத்தை! எனக்குக் கொஞ்சம் தோட்டத்திலே வேலை இருக்கு. பூரணியைத் துணைக்கு வைச்சுட்டுப் போறேன்... ஏதாச்சும் வேணுமின்னு கூப்பிடச் சொல்லுங்க.'' அகல்யா அருகில் வந்தபோது ஒரு மணம் கம்மென்று முகத்தில் மோதுவதை உணர்ந்தான்.

அலமாரியில் அடுக்கி வைத்திருக்கும் புடவைகள் இடையே அவள் போட்டு வைத்



திருக்கும் காய்ந்து போன தாழம்பூ மடலின் நறுமணம். சுகமாக மின்விசிறியின் காற்றோடு கலந்து வீட்டுக்குள் வட்டமிட்டது.

வெள்ளிக்கிழமை — அகல்யா கோவிலுக்குப் போக உடுத்திக் கொண்டு போன பட்டுச் சேலையை இன்னமும் களைந்து வைக்கவில்லை போலிருக்கு. எண்ணிக் கொண்ட கிழவியின் உள்ளத்திலே பழைய நினைவுகள் குபீரென்று எழுந்து நெஞ்சை அடைத்துக் கொண்டு விட்டது.

அதுவும் முதல்நாள் அவளைப் பார்க்க வந்த அவள் தோழி பார்வதி, தூங்கிக் கொண்டிருந்த அவளது நினைவுகளைக் கிளறித் தூண்டி விட்டுப்போயிருந்தாள்.

மாமியாரின் வேண்டுகோளைத் தட்டமுடியாது, அவள் உடல்நிலை சிறிதளவு சௌகிய பின்தான் அதை விளக்கிப் பார்வதி அம்மாளுக்கு அகல்யா ஒரு கார்டு போட்டிருந்தாள்.

அவ்வளவுதான் தன் கடைக் குட்டி பேரனுடன் கூடை சாத்துக்குடி பழங்களுடன் அம்பாசிடரில் அவள் சேலத்திலிருந்து பறந்து வந்து விட்டாள்.

எழுந்து உட்காரும் அளவுக்குத்தான் உடம்பு தேறியிருக்கிறது. அதற்குள் நான் முழுவதும் தொணதொணக்க இந்த அம்மாள் வந்து விட்டாங்களே என்று அகல்யாவுக்கு உள்ளூறக் கவலைதான். ஆனால் மாமியாரின் ஆசைக்குக் குறுக்கே நிற்க அவளுக்கு ஆணைம் இருக்கவில்லை.

அவர்கள் இருவரையும் பேச விட்டு அவள் குழந்தையைத் தூக்கிக் கொண்டு தோட்டத்துக்குள் போய் விட்டாள்.

தனியாக அவர்கள் இருந்த போதுதான் பார்வதி சொல்லி வைத்தாள். ''எப்படியிருந்த உடம்பு? எப்படிப் போயிட்டுது... பஞ்சா! நீ உன் மகனை ஊருக்குச் சீக்கிரம்

வரும்படி ஒரு கடிதாசி கண்டிச்சி எழுதிப் போடு. இதென்ன? அறிவு இல்லாத புள்ளையா இருக்கான். பெத்தவனுக்கு மேலவா உத்தியோகம் பெரிசா போச்சு?'' காரமான குரலில் படபடவென்று பொரிந்தாள்.

''வெளி தேசத்தைப் பார்க்கணும்ங்கிற ஆசை. போன இடத்திலே காண்டிராக்டிலே கையெழுத்து வைச்சுட்டான். அது முடிஞ்சு தானே வர முடியும்?'' பெருமூச்செறிந்தாள் தாய்.

''அந்த காலத்திலேதான் பெரியதனக்காரர் ரதி போல உன்னை வீட்டிலே வச்சிட்டு வெளியிலே மைனர் விளையாட்டு விளையாடினார். பணமும் — பவுசும் இருந்திச்சு. யாருமே கண்டுக்கலே. முத்துமாரி கோயில் ஸ்தானிகர்களுக்கே பெரிய புள்ளி. நாட்டாமை அப்படி இப்படின்னு அவர் காலம் கௌரவமா போர்த்திக்கிட்டுப் போயிடுத்து... இப்போ கிராமத்து ஜனங்கள்ளாம் ரொம்ப கெட்டிக்காரங்களாயிட்டாங்க. கூட்டம் போடறாங்க. பேசறாங்க. அப்பப்பா ஒவ்வொத்தன் என்னமா படிச்சிருக்கான்? எதுக்கு சொல்ல வந்தேன்னா. உன் பிள்ளை, பெத்தவளையும் கட்டினவளையும் மறந்து, போன இடத்திலே ஏதாச்சும் வம்பு வழக்கைத் தேடிக் கொண்டால் முன் போல மூடி வைக்க முடியாது. ஊர் சிரிச்சுடும். இந்தப் பொண்ணு அகல்யா துடிதுடிச்சுப் போயிடும். அந்தப் பாவம் நமக்கு வேணுமா? நீ ஏன் உன் மகனுக்குப் புத்தி சொல்லக் கூடாது? எனக்கென்னவோ பஞ்சா, ராஜ்குமாரைப் பத்திக் கவலையா இருக்கு'' என்று முடித்தாள்.

பெரியதனக்காரர் கனகசபை என்றால் குழந்தையும் வாயை மூடிக்கொண்டு விடும். அத்தனை செல்வாக்கு இருந்தது உண்மை. அவருடைய மனைவி என்ற நிலையில் பஞ்சரத்தினத்திற்கு ஒரே ஒன்றைத் தவிர எந்தக் குறையும் இருக்கவில்லை. சின்ன வயதில் அவளும் அகல்யாவைப் போல் பார்க்கப் பெரும் அழகிதான். கிள்ளி எடுத்து விடலாம் போன்ற தங்க நிறம். தளதளவென்று உணவின் ஊட்டத்திலும் — பருவத்தின் செழுமையிலும் — உடம்பை நிறைத்த நகையிலும்... பட்டுச் சேலையிலும் மின்னிக் கொண்டிருந்தாள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

துப்புரவுத் தொழிலாளி 1: ''சரியாத் தான் பேர் வச்சாங்க எதிர் வீட்டு ஆசாமிக்கு ராமன்னு!''

துப்புரவுத் தொழிலாளி 2: ''ஏம்பா..?''

துப்புரவுத் தொழிலாளி 1: ''எப்பப் போய்த் தீபாவளி இனாம் கேட்டாலும் இன்னு போய் நாளை வாங்கிறுரு!''

– உ. ராஜாஜி



பெரியதனக்காரர் ஆசை அறுபது நாட்களுடன் அடங்கி விட்டிருந்தது. திருமணத்தின் போது அவள் தாயார் தன் நாத்தியிடம் கிசுகிசுத்தது லேசாக அவள் காதுகளில் விழுந்து விட்டிருந்தது.

''கனகசபை தாய்க்கு ஒரே பிள்ளை. சொத்து எக்கச்சக்கம். ஆனால் பட்டணத்திலே ஒரு விவகாரத்திலே சிக்கிக் கொண்டு இருக்கிறாராம். அதை ஒழிக்கக் கட்டத்தான் அம்மாக்காரி அவசரமாகக் கல்யாணத்தை முடிச்சு வைக்கிறாளாம். ஆண் பிள்ளைகள். அதுவும் சிறு வயசு. கையில் கொஞ்சம் பசை இருக்கு. அப்படியும் இப்படியும் இருப்பாங்க. அதையெல்லாம்பாராட்ட முடியுமா? ஒரு கால்கட்டு போட்டா எல்லாம் ஒய்ந்துவிடும் என்ற நம்பிக்கை!'' தாயார் முணுமுணுத்தாள். ஒய்ந்ததா?

கல்யாணமான பின்பும் தொடர்ந்து எத்தனையோ பெண் விவகாரங்கள். சில அவளுக்குத் தெரிந்தவை. பல தெரியாதவை. பட்டணத்திலிருந்து அவருக்கு வந்த ஒரு கடிதத்தைத் தவறாக எடுத்துப் படித்துப் பார்த்த போது தானே உண்மை தெரிந்தது? ஏன் அவர் அடிக்கடி சென்னைக்குப் போய் வருகிறார் என்ற விஷயத்தைக் கடிதம் புரிய வைத்தது.

ஆனால் அந்த அதிர்ச்சியையும் துயரத்தையும் தன்னுள்ளே அடக்கிக் கொள்ள மாட்டாது அவள் தன் தாயிடம் கூடத் தெரிவிக்காது — தோழி பார்வதியிடம் கொட்டி அழுது விட்டிருந்தாள்.

காலங்கடந்த கதையைப் பார்வதி இப்போது நினைவு படுத்திக் குத்திக் காட்டுகிறாள்.

''சின்ன வயசிலேதான் அவர் சித்தம் இப்படியும் அப்படியுமா இருந்தார். வயசு காலத்திலே கோயிலும் — பூசையுமா — என் கிட்ட ரொம்ப பிரியமாத்தானிருந்தார்'' — கணவனை விட்டுக் கொடுக்காது பேசினாள் பஞ்சரத்தினம்.

கடந்த கால நினைவெல்லாம் நீர்வீழ்ச்சியாகப் பொங்கிப் புரண்டு கொண்டு நெஞ்சை இறுக்கியது. மறுபடியும் மாரடைப்பு வந்து விட்டது போல் ஒருகணம் அவள் திணறிப் போய் விட்டாள்.

''ராஜ்குமார் ரொம்ப வித்தியாசமான பிள்ளை. அவனைப் பத்தி இங்கே இருக்கும் வரை குற்றம் யாரும் சொன்னதில்லை. கண் காணாத தூரதேசத்திலே இருக்கிறானேன்னு...'' தொடர்ந்து தூபம் போட்டாள் பார்வதி.

தோட்டத்திலிருந்து உள்ளே வந்த போது மாமியார் மூக்குக் கண்ணாடியைக் கையில் பிடித்துக் கொண்டு, மூக்கைத் துவாலையால் துடைத்துக் கொள்வதை அகல்யா கவனித்து விட்டாள்.

பார்வதி மீது அவளுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

'எதையோ கிளறி விட்டுக் கிழவியை அழ வைத்து வேடிக்கை பார்க்கிறாளே வம்புக்காரி' என்ற சீற்றம்.

''கோயிலுக்குப் போய் அம்மனுக்கு அர்ச்சனை பண்ணணும்னு சொன்னீங்களே. பூப் பறிச்சுக் கொண்டு வந்திருக்கேன். பூரணியைத்

அவனைக்கு அனுப்பறேன். கோயிலுக்குப் போய் நீங்க அர்ச்சனை முடிச்சுட்டு வரத்துக்குள்ளே இங்கே சாப்பாடு தயாராகிடும். ஒரு வாய் சாப்பிட்டுட்டு வெய்யில் தாழ்ந்த பிறகு நீங்க பயணப்படலாம்'' என்றான்.

''இல்லேம்மா கோயிலில் அர்ச்சனையை முடிச்சுட்டு அப்படியே நாங்க போகணும். அவருக்கு வண்டி தேவைப்படும். எங்கேயோ இன்னிக்கு சாயங்காலம் ஒரு மீட்டிங்காம். அதுலே அவர் பேசப்போறார்'' பெருமையாகச் சொல்லிக் கொண்டு எழுந்து விட்டாள் பார்வதி. அத்துடன் அவள் தொணதொணப்பதற்கு முற்றுப்புள்ளி வைத்தாகி விட்டது என்றாலும் அவள் கிண்டி விட்ட நெருப்பு பஞ்சரத்தினத்தின் நெஞ்சிலே திகுதிகுவென்று தான் எரியத் தொடங்கி விட்டது.

விருந்தாளிக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு மருமகள் வாயிற்கதவை அடைத்துக் கொண்டு, மீண்டும் தோட்டத்துக்குள் போய் விட்டாள். சிங்காரம் செய்த தோட்ட வேலையை மேற்பார்வையிட்டு, கவனிக்க வேண்டிய வேலை அவளுக்கு அங்கே அநேகம் இருந்தன.

கண்களை மூடியபடி துயரத்துடன் சோபாவில் சாய்ந்து கொண்டாள் பஞ்சரத்தினம். எத்தனையோ வேதனைகளை மனத்திலே அடக்கிக் கொண்டு — வாழ்நாளிலே போலியாகச் சிரித்தபடி வாழ்ந்தவள் அவள். நியாயத்துக்குக் கட்டுப்பட்டு ஒழுக்கமாக வாழ்ந்தவள்.

அவளுக்கு முத்துமாரி, எத்தனையோ சோதனைகளைத் தந்து விட்டிருந்தாள். இப்போது அவளது பார்வையைப் பறித்துக் கொண்டு வேடிக்கையல்லவா செய்கிறாள்?

பெருமூச்சுக்கிடையே, கன்னங்களில் உருண்ட கண்ணீரை மெல்லத் துடைத்துக் கொண்டாள். எத்தனை முயன்றும் பின்னுக்கிக் கட்டுத்தறியைக் கிளப்பிக் கொண்டு தடம் புரண்டு ஓடும் காங்கேயத்துக் காளைகள் போல் அவளது நினைவுகள் எங்கெங்கேயோ புரண்டோடின.

ஏதோ காரியமாக அன்று கனகசபை திருச்சி நகருக்குப் புறப்பட்டிருந்தார். கூடவே தமது பத்து வயது மகனையும் கூட்டிக் கொண்டு போயிருந்தார். அவனுக்கு அன்று பள்ளிக்கூட நாள். நிலத்துக்கு உரம் வாங்கி அனுப்பி விட்டு நண்பர் ஒருவர் வீட்டிலே சாப்பிட்டு விட்டு, இரவு எட்டு மணியளவில் திரும்பி விடுவதாக அவர் சொல்லியிருந்தார்.

கணவனும் குழந்தையும் வீட்டில் இல்லாத போது அவளுக்குத் தனியே சாப்பிடக் கூட மனம் இருக்கவில்லை. பகல் பொழுதுக்குக் கொஞ்சம் மோரைக் குடித்து விட்டு, காய வைத்து ஓடு நீக்கிய புளியைக் கூடையில் அள்ளி வைத்துக் கொண்டு கொட்டையை நீக்க அரிவாள் மனையுடன் உட்கார்ந்து விட்டிருந்தாள். பூரணியும், சிங்காரமும் அடுத்த ஊருக்கு யாரையோ பார்க்கப் போயிருந்தனர். அதுசமயம் அவள் மட்டுமே தான் வீட்டிலிருந்தாள். மாலைப் பொழுதின் மஞ்சள் வெய்யில் முற்றத்திலிருந்து பின்னோக்கிச் சுவரில் மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் அதுவும் மறைந்து விடும். இருட்டத் தொடங்கிவிடும் என்று கணக்கிட்டபடி வேகமாக அவள் வேலையைச்




செய்து கொண்டிருந்த சமயம் வாயில் கதவு இடிபடும் ஓசை கேட்டது.

நர்ஸ் அம்மாள் அற்புத மேரியின் வேலைக்காரி சற்குணம்தான் வாசலில் நின்றுகொண்டிருந்தாள்.

கொஞ்ச நாட்களாக அற்புதத்திற்கு உடம்பு சரியில்லை. படுத்த படுக்கையாகி விட்டிருக்கிறாள் என்று கேள்விப்பட்டிருந்தாள். பரிதாபப்பட்டு ஒருமுறை அவளுக்குச் சிங்காரத்திடம் செலவிற்கு இருபது ரூபாய்கள் அனுப்பி வைத்திருந்தாள்.

ஊருக்கு மருத்துவத் தாதியாக உழைத்துக் கொண்டிருந்த அற்புதத்திற்கு வயது எழுபதிற்கு மேலிருக்கும். தனிக்கட்டை. சில நாட்களுக்கு முன்னர்தான் தள்ளாமையையும் நோயையும் பொருட்படுத்தாமல் கோடி வீட்டுப் பெண்ணிற்குப் பிரசவம் பார்த்து விட்டுப் போனவள்... இப்போது அவளுக்கு என்ன?

''அம்மாவுக்கு ரெண்டு நாளா உடம்பு ரொம்ப கேவலமாகிட்டுதுங்க. நேத்தே பிடிச்சு உங்களைப் பார்க்கணும்னு வாய் ஓயாது புலம்பிக்கிட்டிருக்காங்க. தயவுசெய்து ஒரே ஒரு தடவை அவங்க வீட்டுக்கு வந்து அவங்க கிட்ட வந்து பேச முடியுமான்னு கேட்டு வரச் சொன்னாங்க..'' கண் கலங்கிப் போனாள் வேலைக்காரி.

கனகசபைக்குத் தன் மனைவி தனியே வெளியில் செல்வது பிடிக்காத காரியம். அதுவும் அவர் ஊரில் இல்லாத போது. இருட்டும் சமயம். தயங்கினாள் பஞ்சரத்தினம். ''ரொம்ப அவசரம் அம்மா. இப்போ நீங்க வராட்டி நாளை வரை அவங்க உயிர் தாங்குமான்னு சொல்ல முடியாது... சற்குணம் தழுதழுத்தாள்.

அவர்கள் குடும்பத்திற்கு வெகு காலம் மருத்துவத் தாதியாக இருந்தவள். சளிவலி கால்வலி என்றால்கூட ஓடி வந்து உதவினவள். இன்னும் எத்தனையோ. மனசை உறுத்தியது. மறுக்க முடியவில்லை. வீட்டைப் பூட்டிக் கொண்டு துணிவுடன் வேலைக்காரியைப் பின்தொடர்ந்தாள் அவள்.

# FOCUS

''தேர்தல் நெருங்குகையில் ஒவ்வொரு கட்சியும், யாருடன் கூட்டுச் சேரலாம் என்று நினைக்கும் நேரத்தில் நீங்கள் கலை, விவசாய மகாநாட்டை நடத்திக்கொண்டிருக்கிறீர்களே?'' என்று கேட்டதும் அமைதியாகப் பதில் அளித்தார் குமரி அனந்தன்:

''இந்த மகாநாட்டை மூன்று பகுதிகளாகப் பிரித்து அளித்தது ஒரு தனிச் சிறப்பு. கலை, இலக்கியம், விவசாயம் ஆகியவற்றின் கலப்பாக மகாநாடு அமைந்தது.

''இலக்கியவாதிகள், அரசியல்வாதிகளுக்கு அறிவுரை கூற ஆற்றல் படைத்தவர் அன்று என்ற எண்ணம் போக வேண்டும். அதே போல அரசியல்வாதிகளில் சிலர், கட்சி அரசியல் கலப்பில்லாமலேயே இலக்கியம் பேச முடியும் என்பதை நிரூபிப்பதே இலக்கியப் பிரிவின் நோக்கம்.

''விவசாயம் நம் நாட்டின் முதுகெலும்பு. விவசாயப் பிரச்னைகளையும் விவசாயிகளின் பிரச்னைகளையும் பொதுமக்கள், அரசின் கவனத்துக்குக் கொண்டு வரவே மகாநாட்டில் இதற்கு முக்கிய இடமளித்தோம்.

''மகாநாட்டில் அனைத்திலும் முக்கிய அம்சம், சர்வாதிகாரத்தையும் வகுப்புவாதத்தையும் எதிர்த்துப் போரிடுவது ஆகும். விஷச் செடிகளை மக்கள் ஆதரவுடன் அடியோடு அகற்றப் பாடுபடப் போகிறோம்'' என்று கூறி மெல்லச் சிரித்தார் குமரி அனந்தன்.

பேட்டி: சிக்கி



✖ குமரி அனந்தன்



✖ கடலங்குடி

சம்ஸ்கிருத பண்டிதரும் வேதாந்த விற்பன்னரும் சோதிட நிபுணருமான கடலங்குடி நடேச சாஸ்திரிகளின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டு வருகிறது. இவரைப் பற்றி ஒரு சுவையான விஷயம், இவர் கவிஞரும் கூட என்பது. ''தமது வாழ்க்கைக் குறிப்பை சம்ஸ்கிருதத்தில் கவிதை வடிவிலேயே எழுதி வைத்திருக்கிறார்!'' என்று அவரது மகள் ஸ்ரீமதி கே. என். சரஸ்வதி கூறுகிறார்.

அற்புதமேரி ஊருக்கு ஒதுக்குப் புறமான ஒரு வீட்டிலே தன்னந்தனியே தான் வசித்துக் கொண்டிருந்தாள். வேலைக்காரியைத் தவிர அவசரத்துக்கு உதவ அருகிலே யாரும் இல்லாத அவல நிலை. உடைந்து வரும் தறுவாயிலிருந்த பழைய வீடு அது. அவன் அதை அடையுமுன்னே இருட்டி விட்டது. சற்குணம் அவசரமாக ஒரு ஹரிகேன் விளக்கை ஏற்றி, கூரையிலிருந்து தொங்கிய கம்பியில் மாட்டி விட்டு, வாயில் கதவைச் சாத்திக் கொண்டு வெளியே போய்விட்டாள். கூடத்துக் கயிற்றுக் கட்டிலில் வற்றி உலர்ந்த குச்சி போல் கிடந்த அற்புதத்தின் பற்களும் கண்களும் மகிழ்ச்சியில் விளக்கொளியில் பளிச்சிட்டன.

''உட்காருங்க!'' அருகில் கிடந்த பிரம்பு நாற்காலியைக் காட்டி உபசரித்தாள் அற்புதம்.

''ராஜ்குமாருக்கு வயசு பத்தாகுதில்லையா? நல்லா படிக்கிறானா?'' பரிவுடன் விசாரித்தாள்.

தும்பைப் பூவாக, படர்ந்து புரண்டு கிடந்த அவளது கூந்தலையும், ஒட்டிய கன்னங்களையும் ஒடுங்கி விட்ட உடலையும் உற்றுப் பார்த்துப் பஞ்சரத்தினம் மனம் கரைந்து போனான்.

''ராஜ்குமாரைப் பத்திப் பிறகு பேசலாம். உனக்கு என்ன வேணும் சொல்லு. இந்த உடம்போட நீ தனியா இப்படி படுத்துக் கிடப்பது சரியில்லை. அவர் திருச்சியிலிருந்து வரட்டும். சொல்லி உன்னை பக்கத்து டவுன் ஆஸ்பத்திரியிலே சேர்த்துடச் சொல்றேன். வேறே ஏதாவது....'' அவன் முடிக்கவில்லை.

''எனக்கு உங்களிடமிருந்து காசு பணம் வேறே எந்த உதவியும் தேவையில்லையம்மா. ஒரே ஒரு வேண்டுகோள். அதுக்கு நீங்க சம்மதிக்கணும். கொஞ்ச நாளா என் மனசாட்சி என்னை வாட்டி வதைக்குது. நீங்க ஒப்புக் கொள்வதாக வாக்குக் கொடுத்துட்டா, நான் என் கடமையைச் செய்து விட்ட திருப்தியோட கண்களை மூடிப்பேன். இல்லாட்டி...'' பேச முடியாது பலமாக இருமினாள் அற்புதம்.

பஞ்சரத்தினத்துக்குத் தாங்க முடியாத குழப்பம்! என்ன சொல்ல இப்படி சுத்தி வளைக்கிறாள்? நெஞ்சு பக்பக்கென்று அடித்துக் கொண்டது. வீட்டுக்குள்ளே மண்டிக் கிடந்த புழுக்கமும், நோயாளி மீதிருந்து எழுந்த மக்கிய வேசமும், அவனுக்குத் தாங்க முடியவில்லை. வயிற்றைப் புரட்டியது.

இப்படிக் கொஞ்சம் குனியுங்கோ. சொல்றேன்.. நல்லா கேட்டுக்குங்க. நியாயத்தைச் சிந்திக்கப் பாருங்க. என் மனசு நிலை கொள்ளாமத் தவிக்குது. அவர் கிட்டேயும் நீங்கதான் எடுத்துச் சொல்லணும். உங்களைக் காண அவன் வருவான். வீணா மனம் நோகப் பேசித் துரத்தி அடிச்சுடாதீங்க. அது பாவம். ஏதாச்சும் கணிசமா அவனுக்குக் குடுங்க. கொடுத்து வாழ வசதி பண்ணிக் கொடுங்க. அவன் ரொம்பக் கஷ்டப்படுகிறான்.''

அதற்குப் பின் மேல் மூச்சு வாங்க அவள் தாழ்ந்த குரலில் சொன்ன அந்த விவரம் பூராவும் கேட்ட போது பஞ்சரத்தினம் பயத்தில் உடல் சில்லிட்டுப் போனான். (தொடரும்)




**ப**டிப்பாளிகளாக இல்லாமலும், மஹா புத்திமான்களாக யாராவது இருக்கலாமாயினும், இதெல்லாம் எக்ஸெப்ஷனே தவிர (அபூர்வமான விலக்கே தவிர) ஜெனரல் ரூல் இல்லை. (பொது விதி இல்லை.) என்பதால்தான் கல்வித் தகுதி வைத்தார்கள். எதையும் சான்ஸுக்கு விட்டு விடக் கூடாது. உறுதியாக நிர்த்தாரணம் பண்ணித் தர வேண்டும் என்பதுதான் அபிப்பிராயம். நம் அரசியல் நிர்ணய சபைக்கே அக்ராஸனரான ராஜேந்திர பிரஸாதும் அபேக்ஷகர்களுக்கு இப்படிப்பட்ட தகுதி இருக்கத்தான் வேண்டும் என்று நினைத்தார். பேரே சட்ட ஸபை. அதாவது அதன் முக்கிய வேலை அநேகச் சட்டங்களைப் போடுவது. இந்தச் சட்டங்களைக் குறித்த பாயின்ட்களை விசாரித்துத் தீர்ப்புச் செய்கிற ஜட்ஜுகள், அவற்றை வாதிக்கிற வக்கீல்கள் இவர்களுக்கெல்லாம் கல்வி அறிவு இருந்தே தீர வேண்டும் என்று விதித்திருக்கிறது. அப்படியிருக்கச் சட்டத்தைச் செய்கிறவர்களுக்கு அதன் 'இம்ப்ளிகேஷன்'கள் (உட்கிடைகள்), அதனால் ஏற்படக் கூடிய ஸாதக பாதகங்கள் இவற்றை அறிவதற்கான பொதுக் கல்வி அறிவு இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது நியாயம்தானே! அதோடு ஏதோ உள்நாட்டிலும், வெளி நாட்டிலிருந்தும் சண்டை சச்சரவு வராமல் ரக்ஷிப்பது, ரயில்வே, தபால் முதலான பொது ஸௌகர்யங்கள்-ஆகியவை மட்டுமில்லாமல் ராஜாங்கமானது Welfare State என்ற பெயரில் ஸமூக வாழ்க்கையின் ஸகல துறைகளிலும் பிரவேசித்துச் சட்டங்களைச் செய்கிற போது, இவற்றிலெல்லாம் Working knowledge (பொதுப்படை அறிவு) பெறக் கூடிய அளவுக்குப், படிப்பறிவு இருந்தால்தானே தேவலை? இந்த மாதிரி ராஜேந்திர பிரஸாத் ஏதாவது சொன்னால்—'ஹிண்டு கோட் பில்' விஷயமாகக் கூட அவர் சிலவற்றை ஆட்சேபித்துச் சொன்னார்—உடனே நேரு, இந்தச் சீர்திருத்தமெல்லாம் பண்ணவிட்டால் தன் மந்திரி சபையிடமே கான்ஸ்டிட்யூயன்ட் அஸெம்ப்ளிக்கு (அரசியல் நிர்ணய ஸபைக்கு)க் கான்ஃபிடன்ஸ் (நம்பிக்கை) இல்லை என்று சொல்கிற மாதிரியாகும் என்று சொல்லி, ராஜிநாமா பண்ணுவது போலப் பயமுறுத்திப் பயமுறுத்தியே பில்கள் பாஸ் ஆகும்படி பண்ணினார்;

இந்தப் புதுக் கதை இருக்கட்டும்; பழைய கதையைப் பார்க்கலாம்.

அதிலிருந்த எல்லா Clause களுக்கும் (ஷரத்துக்களுக்கும்) உயிர்நிலை, அபேக்ஷகருக்கு அர்த்த சுத்தியும், ஆத்ம சுத்தியும் இருக்க வேண்டும் என்பதுதான். இந்த சுத்தத்தாலும், இது தருகிற தர்ம சக்தியாலும், தீரத்தினாலும்தான் மெகஸ்தனிஸின் காலத்திலிருந்து வெளி நாட்டாரெல்லாம் நம் தேசத்தைத் தலைக்கு மேல் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடியிருக்கிறார்கள். அபேக்ஷகர்கள் அர்த்த சுத்தியோடும் ஆத்ம சுத்தியோடும் இருப்பது இருக்கட்டும். வயஸு வந்தவர்களுக்கெல்லாம் வோட்டுரிமை என்று பண்ணி, இதுவரை ஆத்ம சுத்தியோடு இருக்கிற எத்தனையோ கோடி ஜனங்களை அர்த்தத்தினால் (பணத்தினால்) அசுத்தி செய்து, அதனால் அவர்களுடைய ஆத்மாவையும் அசுத்தமாக்கி விடப் போகிறார்களே என்றுதான் பயமாயிருக்கிறது. இதுவரை, எழுத்தறிவில்லாவிட்டாலும், ஏழையாயிருந்தாலும் நம் பொதுஜனங்கள் லஞ்சம் கொடுக்க பயந்தே வந்திருக்கிறார்கள்; அவர்களே லஞ்சம் வாங்கிக்கொள்ளவோ இதுவரை பிரமேயமே ஏற்பட்டதில்லை. Adult Franchise என்று கொண்டு வந்தால், பணத்தைக் காட்டி இந்த ஏழை ஜனங்களை லஞ்சம் வாங்கும்படி பண்ணுவதில் கட்சியோடு கட்சி போட்டி போடப் போகிறதே என்று விசாரமாக இருக்கிறது. ஒரு தப்புக்குப் பழகிவிட்டால், மேலும் மேலும் தப்புப் பண்ணுவதில் குளிர் விட்டுவிடும். நம்முடைய பொதுவான நல்ல ஜனங்கள் லஞ்சம் வாங்கிக் கொள்வது என்ற ஒரு தோஷத்துக்கு ஆளாகிவிட்டால், அப்புறம் எதிர் எதிர்க் கட்சிகளிடமும் வாங்கிக்கொண்டு ஒன்றை ஏமாற்றி நாமம்போட்டு அஸத்தியம் என்ற பெரிய தோஷத்துக்கும் ஆளாகிவிடக் கூடும். எங்கேயோ ஓர் ஆபீஸருக்கு லஞ்சம், பியூனுக்கு 'டிப்' என்றில்லாமல் தேசம் முழுக்க Wholesale ஆக இப்படி லஞ்சம், அஸத்தியம் எல்லாவற்றையும் கொண்டு வந்து விட்டு, ''இது புண்ணிய பூமி'' என்பதையே மாற்றிவிடச்செய்வதற்கா ஜனநாயகம் என்றுகூடத் துக்கமாக வருகிறது.

(தொடரும்)

# சினிமா மசாலா

## "சலன்"

நடிகை சுலக்ஷணாவின் தங்கை விஜயேட்டா இன்று நடிகையாகி விட்டாள். அதே போல் நடிகை வித்யா சின்ஹாவும் தன் தங்கை ஸ்வீட்டியை நடிகையாக்கி விட முயற்சி செய்கிறார். ஸ்வீட்டி என்றவுடன் நடிகை பிரமீளாவின் தங்கை ஸ்வீட்டியின் நினைவு வருகிறது. பிரமீளாவும் அதே முயற்சியில் ஈடுபட்டு இதுவரை வெற்றி அடையா விட்டாலும் முயற்சியைக் கைவிடுவதாக இல்லையாம். நடிகை ஜெயகுமாரியின் தங்கையும் இப்போது நடிக்க வந்துவிட்டார். இந்த லிஸ்டில் சத்தியப்பிரியாவின் தங்கையையும் சேர்க்கலாம். 'எதற்கும் துணிந்தவன்' படத்தில் நடித்த கே. எஸ். ஜெயலட்சுமியும் தன் தங்கையைத் தயார்ப்படுத்தி விட்டாராம் படத்தில் நடிக்க வைக்க. ஆக எல்லோரும் தன் தங்கை பெரிய நடிகையாக வரவில்லை என்றாலும் குறைந்த பட்சம் ஜெயசுதாவின் தங்கை சுபாஷிணியைப் போலவோ இல்லை டிம்பிளின் தங்கை சிம்பிளைப் போலவோ வந்தால் சரி என்று எண்ணுகிறார்கள்.

● ● ●



× ராஜகண்ணு

× பாரதி ராஜா, நிவாஸ், அமோல் பலேகர்

மேலே இருப்பது பாரதி ராஜா. அதற்குக் கீழே இருப்பது ஒளிப் பதிவாளரும் கல்லுக்குள் ஈரம் படத்தின் இயக்குனருமான நிவாஸ். அதற்குக் கீழே இருப்பவர் யார் தெரிகிறதா? அவர்தான் முதன் முறையாக இயக்குனர் பொறுப்பை ஏற்றிருக்கும் நடிகர் அமோல் பலேக்கர். அவர் இயக்கப் போகும் படம் 'ஃபுட் பாத்'.

● ● ●

திரை உலகில் பலருக்குப் பலவிதமான பெயர்கள் உண்டு. மனோரமாவை ஆச்சி என்றே அழைப்பார்கள். எம். ஜி. ஆரை சின்னவர் என்பார்கள். பெரியவர் எம். ஜி. சக்கரபாணி. சிவாஜி 'அண்ணன்'. தம்பி வி. சி. சண்முகம். நம்பியாரை ஐயப்பசாமி எனக் குறிப்பிடுவார்கள். கமலஹாஸனை அவர் வீட்டில் நடிகர் என்று அழைப்பார்கள். ஒரு நடிகையைப் 'பணத் திமிர் வருகிற நப்பா' என்றும் சொல்வார்கள். நடிகை யார் என்று மட்டும் கேட்காதீர்கள்!

● ● ●

முதன் முதலாக மெல்லிசையில் காதல் பாட்டுகளைத் தனி ரெக்கார்டாகக் கொடுத்திருக்கிறார் மலேஷியா வாசுதேவன். பெருமையாக இதை என்னிடம் சொல்லிய அவர், இந்தப் பாடல்களை நானே இசையமைத்தேன் என்றும் கூறினார்.

● ● ●

ஐந்து ரூபாயுடன் சென்னை வந்தவர் இன்று லட்சாதிபதி. இவரது முதல் படத்தை வாங்கப் பலர் மறுத்தார்கள். தாமே வெளியிட்டார். அடுத்த படத்தையும் தாமே சில ஏரியாக்களில் வெளியிட்டார். இப்பொழுது தமது மூன்றாவது படத்தையும் தாமே தியேட்டரை வாடகைக்கு வாங்கி வெளியிட்டுள்ளார். அவர்தான் துணிச்சலும் தன்னம்பிக்கையும் உள்ள தயாரிப்பாளர் ராஜ் கண்ணு. இவர் தமது மூன்றாவது படமான 'கன்னிப் பருவத்திலே' படத்துக்காக எமரால்டு தியேட்டரைப் பதினைந்து வாரம் வாடகைக்கு எடுத்துள்ளார். அடுத்த படத்தை இவரே இயக்கவும் போகிறார்.



# ஆஸ்தமனங்களும் அபஸ்வரங்களும்

ராஜேஷ் குமார்

**ப**ம்பாய் கேட் வே ஆப் இண்டியா.

நானும் என்னுடைய நண்பன் மோகன்லால் வால்சந்தும் எலிபெண்டா கேவ்ஸுக்குப் போவதற்காக ஜனக் கூட்டத்தினிடையே காத்துக் கொண்டிருந்தோம்.

சூரத்திலுள்ள என் மகனையும் மருமகளையும், பேரன் பிரகாஷையும் பார்த்து ஒரு மாதத்தை அவர்களோடு கழித்து—நெஞ்சில் இனிப்பையும் சந்தோஷத்தையும் அளவுக்கதிகமாகவே சுமந்து கொண்டு ஊர் திரும்ப எண்ணியபோதுதான் எனக்கு பம்பாயிலிருக்கும் என்னுடைய பால்ய சிநேகிதன் மோகன்லால் வால்சந்தின் நினைவு வந்தது. சூரத்திலிருந்து திரும்பும் வழியில் மோகன்லாலைப் பார்க்க முடிவு செய்தேன். மோகன்லாலுக்குக் கடிதாக போட்டுவிட்டுச் சூரத்திலிருந்து புறப்பட்டேன்.

மோகன்லால் தாதர் ஸ்டேஷனுக்குத் தன் மனைவியோடு வந்து என்னை ஆர்ப்பாட்டமாய் அழைத்துப் போனான். மோகன்லாலின் குடும்பம் பத்து வருஷ காலம் மதுரையில் இருந்ததின் பயன் மோகன்லாலுக்கு நன்றாகத் தமிழ் பேச வந்தது.

முதல் இரண்டு நாள் மகாலட்சுமி கோயில், சௌபாத்தி கடற்கரை, அக்வேரியம், சாந்தாக்ரூஸ் ஏர்போர்ட் என்று கூட்டிக்கொண்டு போனான். எலிபெண்டா குகையைப் பார்த்து விட்டு ஊருக்குத் திரும்புவதென்று முடிவு செய்தேன்.

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. நல்லெண்ணெயில் செய்த புளியோதரை — கட்டித் தயிரில் பிசையப்பட்ட தயிர் சாதம்... பொட்டலங்களோடு படகுக்காகக் கேட் வே ஆப் இண்டியா அருகே இப்போது காத்துக் கொண்டிருக்கிறோம்....

—ஏறக் குறைய இரண்டு மணி நேரம் கழித்துத்தான் அந்த ஸ்டீம் போட்டில் இடம் கிடைத்தது. சுமார் ஐம்பது பேர் உட்காரக் கூடிய அளவுக்குச் சற்றுப் பெரிதான போட் அது.

படகில் ஏறி உட்கார இடம் தேடினேம்.

அந்த இடத்தில்தான் விதி புன்னகையுடன் என்னோடு விளையாடத் தொடங்கியது. அதை அப்பொழுது நான் உணரவில்லை.

உட்கார இடம் தேடியபோதுதான் மூன்று பேர் அமரக்கூடிய அந்த இருக்கையில் ஏற்கெனவே அந்த இளம் பெண் ஓரமாய் அமர்ந்தபடி கடலை வெறித்துக் கொண்டிருந்தாள்.

மோகன்லால் அந்தப் பெண்ணுக்குப் பக்கத்தில் உட்காரும்படி என் தோளைப் பற்றி அழுத்தினான். ஒரு பெண்ணுக்குப் பக்கத்தில் உட்கார என்னவோ போல் இருந்தாலும் பம்பாயில் இது போன்ற காரியங்கள் சகஜமாய் நடைபெறுவதை நான் இந்த இரண்டு நாட்களில் பூரணமாய் அறிந்திருந்தாலும், என் ஐம்பத்தைந்து வயதை ஒரு சாக்காக வைத்தும் — ஒன்றும் பேசாமல் அவளருகே உட்கார்ந்து கொண்டேன்.

நான் உட்கார்ந்ததும் அந்தப் பெண் சட்டென்று திரும்பி என்னை ஏறிட்டாள்.

எவ்வளவு அழகான — கருமையான இரப்பைகளோடு கூடிய — பட்டாம்பூச்சியாய்ச் சிறகடிக்கும் விழிகள்! பளிங்கில் பாலைத் தடவினாற் போன்ற நிறத்தில் — தாமரைப் பூவாய் முகம். குவிந்த மோவாயின் அழகான விளிம்பில் அநாதையாய் — ஆனால் அழகாய் நிற்கும் அந்தச் சின்னஞ் சிறு மச்சம். அவளைப் பார்த்த அந்த விநாடியில் என் மனம் ஆனந்த பைரவியின் இனிமையை உணர்ந்தது.

இரண்டே விநாடிகள்தான்.

அவள் சட்டென்று திரும்பி மீண்டும் கடலை வெறிக்க ஆரம்பித்தாள். நான் அவளைப் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தேன்.

மோகன்லால் கேட்டான்: ''என்ன அந்தப் பெண்ணை அப்படிப் பார்க்கிறே?''

நான் மெல்லச் சொன்னேன். ''மோகன்! அந்தப் பொண்ணோட முகத்தைக் கவனிச்சியா? மனசிலே ஒரு சூறாவளி அடிச்சிக்கிட்டிருந்தாத்தான் முகம் இப்படி இருக்கும். பார்வை இப்படி வெறிக்கும்.... பொண்ணு பார்க்க ரொம்பவும் லட்சணமா யிருக்கா... ஒரு ஆனந்த பைரவி நெஞ்சிலே நெருடற மாதிரி ஒரு இதம். ஆனா ரோஜா புஷ்பத்து மேலே கல்லை வெச்ச மாதிரி அந்தப் பெண்

ளோட முகத்திலே ஒரு கனமான சோகம்.... என்ன பிரச்னையோ?''

மோகன்லால் உதட்டில் கேலி வழியச் சொன்னான். ''பம்பாயிலே இருக்கிற எண்பது லட்சம் பேருக்கும் எண்பது லட்சம் பிரச்னைகள் இருக்கும். அதை யெல்லாம் உன்னாலே சால்வ் பண்ண முடியாது...இந்தப் பொண்ணுக்கு என்ன பிரச்னை இருக்க முடியும்னு நான் சொல்லட்டுமா? ரொம்ப ஈஸி.... இந்தப் பொண்ணைப் பார்த்தா குஜராத்திப் பெண் மாதிரி தெரியறது. இந்தப் பெண் ஒருத்தனைக் காதலிச்சிருப்பா. கொஞ்ச நாள்லே அவனோட மனசு இசை திரும்பிப் போயிருக்கும். அவனுக்கு இவள் மனசைக் கொடுத்த மாதிரி உடம்பையும் கொடுத்திருக்கலாம். இன்னிக்கு க்ளைமேக்ஸ் சீனாய் இருக்கலாம். அதாவது இன்னிக்கு இவளும் அவனும் எலிபெண்டா கேவ்ஸில் சந்தித்துக்கொள்ளும் உச்ச கட்ட காட்சியாய் இருக்கலாம்... பம்பாயில ஒரு நாளைக்கு நூறு காதல் அரும்பினா நூறு காதல் அழியுது... அதுல இதுவும் ஒண்ணு....'' — தமிழில் வெகு சரளமாகச் சொல்லிக் கொண்டு போன மோகன்லால், அந்தப் பெண் தன்னை நோக்கி சட்டென்று முகத்தைத் திருப்புவது தெரிந்ததும் பிரேக் போட்டாற் போல் பேச்சை நிறுத்தினான்.

அவள் தலையைச் சாய்த்து மோகன்லாலைப் பார்த்துப் புன்னகைத்தாள். நல்ல தமிழில் பேசினாள். ''நீங்க சொன்னது ரொம்பவும் கரெக்ட் ஸார். நீங்க என்னைப் பத்தி அனுமானிச்சுச் சொன்ன அத்தனை வார்த்தைகளும் பொய் கொஞ்சமும் கலவாத வார்த்தைகள்... நீங்க சொன்ன அந்தக் காதலன் என்னோட மனசைத் தொட்ட நாட்களைக் காட்டிலும் என்னோட உடம்பைத் தொட்ட நாட்கள்தான் அதிகம்...''

மோகன்லாலின் முகம் சட்டென்று கறுத்துஅந்தப் பெண்ணின் முகத்தை ப்பார்க்கக் கூசித் தாழ்ந்தது.

படகு சடசடவென்று பொரிந்தபடி சீராய் நீரைக் கிழிக்கத் தொடங்கியிருந்தது.

''ஸாரி... என்னோட மனசிலே பட்டதைச் சொல்லிட்டேன். உனக்குத் தமிழ் தெரிஞ்சிருக்கும்னு நான்கொஞ்சமும் எதிர்பார்க்கல்லை. உன்னோட மனசை என்னோட வார்த்தைகள் 'ஹார்ட்' பண்ணியிருந்தா ஐ நீட் யுவர் எக்ஸ்க்யூஸ்....''—மோகன்லால் உதட்டைக் கடித்தபடி சொன்னான்.

''எங்கப்பாவுக்கு உங்களுடைய வயசுதான் இருக்கும். அவர் இதே வார்த்தைகளைச் சொன்னா நான் என்ன பதில் சொல்ல முடியும். ''என்னைப்பற்றிச் சுட்டிக்காட்டறதுக்கு எங்கப்பாவுக்கு இருக்கிற உரிமை உங்களுக்கும் இருக்கும்.... ஐ ஹானர் யுவர் ஏஜ்...''

இதுவரை ஒன்றும் பேசாமல் இருந்த நான் குறுக்கிட்டேன். ''தப்புன்னு தெரிஞ்சும் அதே தப்பைச் செஞ்சுட்டுப் பின்னாடி வருத்தப்படுவானேன்?''

அந்தப் பெண் விழிகள் விரிய என்னை ஏறிட்டாள். சொன்னாள்: ''யூ ஆர் ராங் பாபா... காதல் அரும்பற அந்த ஆரம்பக் காலக் கட்டங்களில் காதலன் ஒரு தெய்வீக புருஷனாத்தான் எல்லாப் பெண்களுக்கும் தெரியறான். மத்தவங்க மாதிரி இல்லே எங்க காதல்னு பெருமைப்பட்டுக்குவா. அவரோட விரல் கூட எம்மேலே பட்டதில்லேன்னு தோழி கிட்டச் சொல்லிப் பூரிச்சுப் போயிடுவா... எல்லாமே மூட்டம் போட்டிருக்கிற வானத்திலே சில கண நேரம் பளிச்சிடற வான வில்லின் நிறங்கள் மாதிரி கனவுகள்... நினைவுகள் வான வில்லோட நிறங்கள் வெளுக்கிற மாதிரி ஒரு நாளுக்கு. அந்தக் கனவுகளும் நினைவுகளும் வெறும் பொய்யாய்ப்போகையில் அவள் வெறுமையாய் நிற்கிறாள்...''

அழகுக்கேற்ற அறிவிருந்தும் சகதியில் தவறி விழுந்திருக்கிறாள், இந்தப் பெண்.

நான் கேட்டேன். ''நீ மெட்ராஸா?''

''இல்லே. பம்பாய்தான். நான் குஜராத்திக்காரிதான். மெட்ராஸிலே பத்து வருஷம் என்னோட சித்தப்பா வீட்டிலே இருந்தேன். படிப்பு.. தோழிகள் எல்லாமே மெட்ராஸில்தான். தமிழிலே நான் இவ்வளவு ப்ளுயண்டா பேசறதுக்குக் காரணம் என்னோட தோழி தமிழ்ச் செல்விதான். அவள் மெட்ராஸிலே ஒரு ஹைஸ்கூலில் தமிழ் டீச்சரா இருக்கா...''

அவள் முகத்திலிருந்த சோகத்தின் அடர்த்தி இப்போது சற்று வெளிறியிருந்தது.

நான் இருக்கையில் நன்றாகச் சாய்ந்து கொண்டு கேட்டேன். ''என்னை உன் அப்பா மாதிரி நினைத்துக் கொண்டு நான் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் சொல்லுவியா?''

''ஷ்யூர்...''

''உன்னோட பேர் என்னம்மா?''

''ஆர்த்தி.''

''அப்பா அம்மா இருக்காங்களா?''



''அம்மா நான் பிறந்த மறு நிமிஷமே போயிட்டா. அப்பா இருக்கார். என்னைப் பத்திக் கவலைப்படாத அப்பா... ஒரு எக்ஸ்ட்ரா நடிகை வீட்டில் குடும்பம் நடத்திக் கொண்டிருக்கிறார்.''

''இப்ப.... நீ?''

''ஒரு பிரைவேட் கன்சர்ன்ல டைப்பிஸ்டா இருக்கேன். விமன்ஸ் ஹாஸ்டல்லே தங்கியிருக்கேன்.''

''அவன் — உன்னோட காதலன் என்ன செய்யறான்?''

''ஸாரி... அவரைப் பத்தி எந்த விஷயமும் உங்க கிட்டச் சொல்ல எனக்கு விருப்பமில்லே. அவருக்கு வர்ற வெள்ளிக் கிழமை அவரோட சொந்த ஊரான நாசிக்கில் கல்யாணம் ஏற்பாடாயிருக்கு. பொண்ணு அவரோட மாமா மகள். அவருக்கு அந்தக் கல்யாணத்திலே இஷ்டம் இருக்குன்னு எனக்குத் தெரியும். ஏன்னா அவரோட மாமா ஒரு மில்லினர். என்னைப் புறங்கையாலே ஒதுக்கற கொசு மாதிரி ஒதுக்கிட்டார். அவர்கிட்டச் சில முக்கியமான விஷயம் பேசணும். அதுக்காகத்தான் இன்னிக்கு எலிபெண்டா கேவ்ஸுக்கு வரச் சொல்லி அவருக்கு நேத்தைக்கு போன் செஞ்சேன். அவரும் வர்றதா சொன்னார். சாயந்திரம் ஆறு மணிக்கு அவர் எப்படியும் வந்து என்னை மீட் பண்றதாச் சொல்லியிருக்கார்.'' ஆர்த்தி ஆர்வமாய்ச் சொன்னாள்.

''அவன் வரல்லேன்னா?''

''எலிபெண்டா கேவ்ஸிலிருந்து என் பிணம்தான் போகும்.''

என்னுடைய உடம்பு சிலிர்த்தது. மோகன்லாலின் முகம் இறுகியிருந்தது.

படகு எலிபெண்டா கேவ்ஸை நெருங்கியது. எல்லோரும் இறங்கிய பின் கடைசியாக நானும் மோகன்லாலும் இறங்கினோம். அந்தப் பெண் விழிகளை நாலா பக்கமும் சுழற்றியபடி அவளுடைய அவனைத் தேடிக்கொண்டிருந்தாள்.

''என்ன வந்திருக்கிறானா?'' — கேட்டேன்.

அவள் விழிகளில் நீர் பளபளக்கத் தலையைப் பக்கவாட்டில் அசைத்து 'இல்லை' என்றாள்.

''சரி, எங்களோட வாம்மா... அவன் எப்படியும் வந்திடுவான். கொஞ்சம் புளிச்சாதம் தயிர் சாதம் சாப்பிடலாம்... காலையில்கூட நீ ஒண்ணும் சாப்பிட்டிருக்க மாட்டாய்....''

அவள் வேண்டாமென்ற பாவனையில் தலை அசைத்தாள். ''நீங்க சாப்பிடுங்க ஸார்.... நான் அவரைத் தேடணும்...''

''நோ... நோ... உன்னைத் தனியா விட எங்க மனசுக்குத் தைரியமில்லே. இன்னிக்குப் பூராவும் நீ எங்களோட கஸ்டடியில்தான் இருக்கணும்.''

''நீங்க கவலைப்படாதீங்க ஸார்... நான் நிச்சயமா இன்னிக்குச் சாயந்திரம் ஆறு மணி வரைக்கும் உயிரோடு இருப்பேன்... அவர் வந்தா என்னோட உயிர் என்னோட உடம்பிலே இருக்கும். அவர் வரலேன்னு இந்த ஆர்த்தியோட உடம்பு மட்டும்தான் இங்கிருந்து போகும்...''

டி. வி. குப்தா மெட்ராஸ் ஸ்போர்ட்ஸ் கிளப்பில் ஸ்னூக்கர் ஆடிக் கொண்டிருந்தார். 1958ம் வருஷ தமிழக சாம்பியன் இவர். இவரது Highest Breack 72 73ம் வருஷத்தில் 387 பாயின்டுகள். இருநூற்றுக்கு மேற்பட்ட கோப்பைகளைப் பெற்றிருக்கிறார். வெற்றி பெற்றதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்ளாமல் இவர், உலக சாம்பியன் எம். ஜே. எம்.லாபிரிடம்68 பாய்ன்டுகளில் தோற்றதைப் பெருமையாகக் கூறிக் கொள்கிறார். இவர் கிரிக்கெட், வாலிபால் ஆட்டங்களிலும் வல்லுநர்.

புகைப்பட நிபுணர் உத்ரா கூறுகிறார்:

பிளாஷ் பயன்படுத்தினேன். ஃபாஸ்ட் பிலிம் உபயோகப்படுத்தி ஆக்க்ஷனைத் தட்டினேன். ஹாக்கி வாலிபால் போன்றவிரைவு ஆட்டங்களுக்கு Fast Aperture ஸ்தான் ஆக்ஷனை Freeze பண்ண முடியும். ஆனால் ஸ்னூக்கரில் எளிதாக Slow Aperture எடுத்துவிடலாம். 1/8, 8-5,6 இவற்றைப் பயன்படுத்தினேன்.

ஆழ்ந்து கவனம் செலுத்திக் கண்களை அகல விரித்துக் குறி பார்க்கின்ற குப்தாவின் முக பாவத்தைப் பாருங்கள். உடலின் வளைவையும் கரங்களின் 'போஸிஷனை'யும் கவனியுங்கள். 'இதோ பந்து பாயப் போகிறது. அதன் பாதையிலிருந்து விலகிக்கொள்வோம்' என்று தோன்றுகிறதல்லவா?

படம்: உத்ரா விளக்கம்: குண்டுமணி

என் குரல் உடைவது எனக்குத் தெரிந்தது. ''அம்மா.... ஆர்த்தி.... உன்னோட வார்த்தைகளைக் கேட்டா எனக்கு உடம்பே நடுங்கறதும்மா..... கல்யாணமாகிப் புருஷனோட சந்தோஷமா வாழ வேண்டிய வயசம்மா உனக்கு.... அடம் பிடிக்காதே... அவன் யார்னு எனக்குக் காட்டு. அவன் கிட்டே உனக்காக நான் வாதாடறேன்...''

ஆர்த்தி திரும்பவும் வாய் விட்டுச் சிரித்தாள்.

**மா**லை மணி நான்கு.

ஏதோ ஒரு நிலில் படித்த மனத்தோடு அந்தக் கலைச் செல்வங்களை நுனிப்புல் மேய்வது போல் அவஸ்தையோடு ரசித்துக் கொண்டிருந்தேன். சிற்பங்களைப் பற்றி மோகன்லால் கூறிய விளக்கங்கள் மனத்தில் ஒட்டாமல் பாலிதீன் பேப்பரில் பட்ட மழைத்துளிகளாய் வழுக்கின.

ஆர்த்தி களைத்துப் போய் விட்டிருந்தாள். அவனைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டு— சுற்றிச் சுழன்ற விழிகள் ரத்தமாய்ச் சிவந்து விட்டிருந்தன. இனிமேல் அவன் வரப் போகிறானா? நிச்சயமாக வரப் போவதில்லை.

**ம**ணி ஐந்து முப்பது.

புறப்படலாம் என்பதுபோல் நான் கண்களால் ஜாடை செய்தேன் மோகன்லாலுக்கு.

முழங்கால்களைக் கட்டிக்கொண்டு, தரையை நோக்கிக் குனிந்தவாக்கில் அமர்ந்திருந்தாள்.

''ஸார் புறப்படலாமா?'' — ஆர்த்தி திடீரென்று கேட்டாள்.

நானும் மோகன்லாலும் வியப்பில் அதிர்ந்து சந்தோஷத்தில் மூழ்கினோம்,




''போகலாம்மா.''

''ஸார். காலையில் இன்னிக்கு உங்களைச் சந்திச்சப்போ ஏதோ முட்டாள்தனமாய்ப் பேசிட்டேன். நான் சாகப் போறதில்லே.''

நாங்கள் ஏதும் பேசாமல் ஒருவர் முகத்தை ஒருவர் புன்னகையோடு பார்த்துக் கொண்டோம்.

''நான் ஏன் சாகணும்? எதுக்காகச் சாகணும்? ஒரு அயோக்கியனை நம்பி மோசம் போனதுக்காக என்னோட இனிமையான வாழ்க்கையை எதுக்காக சிதைச்சுக்கணும்?''

''கரெக்ட் ஆர்த்தி! '' சந்தோஷத்தால் கத்தியே விட்டேன்.

''அவரைவிட அழகானவரா.. அறிவுள்ளவரா எனக்கொரு மாப்பிள்ளையைத் தேடிக்க என்னால முடியாதா ஸார்?''

''வெல் செட் ஆர்த்தி...'' — மோகன்லால் சொன்னான்.

''அந்த அயோக்கியனைப் பத்தி நா இனிமே ஒரு விநாடிகூட நினைக்கப் போறதில்லே... இந்த மனைக்குக் கொஞ்சநாள் போனா எல்லாமே மறந்து போகும்....''

ஆர்த்தி உற்சாகமாய் எழுந்தாள்.

**ப**டகு போய்க் கொண்டிருந்தது.

கடற்காற்று ஜில்லென்று ஏர்கண்டிஷனின் குளிர்ச்சியோடு முகங்களில் மோத நிறைவான மனத்தோடு திரும்பிக் கொண்டிருந்தோம்.

ஆர்த்தி பழைய ஆர்த்தியாக இல்லை. முகத்தில் சிரிப்பு அதிகமாய்ப் பரவியிருந்தது. கைப்பையிலிருந்த வட்டக் கண்ணாடியை எடுத்துச் சாந்து திலகத்தைப் பிசிறில்லாமல் நெற்றியில் வட்டமாக இட்டுக் கொண்டாள்.

காலையில் கடலை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அந்த ஆர்த்தியா இவள்?

எனக்கு ஆச்சரியமாய் இருந்தது.

முன்புறமிருந்த படகுக்காரன் கையில் மைக்கோடு எழுந்தான். இந்தியில் வேகமாக என்னமோ சொல்ல ஆரம்பித்தான்.

''என்ன சொல்கிறான்?'' — நான் மோகன் லாலிடம் திரும்பிக் கேட்டேன். மோகன்லால் சொன்னான். ''இப்போது படகு போய்க் கொண்டிருக்கிற இப்பகுதியில் சுறு மீன்கள் அதிகம். கைகளை வெளியே விட்டுக் கொண்டு வருவதோ... குழந்தைகளைப் படகின் ஓரமாக விடுவதோ... குனிந்து பார்த்தபடி வருவதோ கூடாது. ரொம்பவும் ஆபத்தான ஆழமான பகுதி....''

மோகன்லால் சொல்லச் சொல்ல... என்ன நிகழ்கிறது என்பதை உணர்வதற்குள்... ஆர்த்தி என்னையும் மோகன்லாலையும் விலக்கிக் கொண்டு வேகத்தோடு எய்துவிட்ட அம்பாய் நீரினுள் பாய்ந்தாள்.

'ஓ'வென்று படகு மொத்தமும் அதிர...

படகு அதற்குள் இருபதடி நகர்ந்துவிட, நீரில் மூழ்கிக் கொண்டிருந்தாள் ஆர்த்தி. எங்களை நோக்கி கத்தினாள்....''ஸாரி பாபா. உங்களை ஏமாத்திட்டேன்.'' மோகன்லாலும் நானும் பதறினோம். ''ப்ளீஸ் ஹெல்ப் ஹர்'' படகுக்காரனைப் பார்த்துக் கத்தினோம்.

ஆர்த்தி இந்தியில் கத்தினாள். ''என்னைக் காப்பாத்த யாராவது குதித்தால் அவர்களையும் மூழ்கடிச்சுடுவேன்.''

படகுக்காரன் தயங்க, நீரில் குதிக்கமுயன்ற இரண்டொருவர் பின்வாங்க. என்னோடு ஒரு மணி நேரமாய் ஒரு மகளின் பாசத்தோடு பழகிவிட்ட என் ஆர்த்தி என் கண் எதிரே மூழ்கிக் கொண்டிருந்தாள்.

பீறிட்டு வந்த கண்ணீரோடு கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஆறு.

---

ஒருவர்:- என்ன சார் உங்க நண்பர் சாம்பாரில் இருக்கும் தானைச் சாப்பிட ஆரம்பித்தவுடன் பேசவே மாட்டேன் என்கிறார்?

நண்பர் :- அவர் 'தான் உண்டு தன்வேலை உண்டு'ன்னு நினைக்கிறவர்.

-எல். சந்திரசேகர்





● தமிழன் பெருமைப்பட்டுத்தான் ஆக வேண்டியிருக்கிறது. ஏனென்றால் தமிழ் நாட்டில் ஸீரோ கட்சியாக இருந்த ஜனதா இனி ஹீரோ கட்சியாக மாற நல்ல வாய்ப்பு உள்ளது.

தூத்துக்குடி கே. சுவாமிநாதன்

● என்றால் பெருமைப்பட முடியவில்லை! ஒவ்வொரு நடவடிக்கையிலும் இரட்டை வேடம் போட்டு வரும் முதலமைச்சரின் சமீப காலத்தியவேறு வழியில்லாத உடன்பாடுதான் ''ஜனதாவுடன் உடன்பாடு''

வட்டமேஜை

# தமிழன் கருணாநிதியைப் புறக்கணிக்கலாமா?

● நானே உங்களுக்கு எழுதுவதாக இருந்தேன். 75 பைசாவுக்கு எப்படி இவ்வளவு சிறப்பான 'இட்டங்கள்' கல்கியினால் தர முடிகிறது? 90 பைசா ஆக்குவதற்குத் தயங்க வேண்டாம், என்று.

சென்னை-1 உஷா ராஜமூர்த்தி

● யோவ், பெரிய ஆளய்யா நீர்! லக்ஷ்மி, சுஜாதா, சாண்டில்யன் தொடர் கதைகள் வெளிவரும் நேரமாகப் பார்த்து கல்கியின் விலையைக் கூட்டினால் வாசகர்கள் வேறு வழியில்லாமல் வாங்குவார்கள் என்ற எண்ணமா ஐயா உமக்கு!

மதுரை சு. பிரேம்குமார்

● அதிர்ச்சியடைந்தேன். அனைவரும் பத்திரிகையின் விலையைத் திடீரென்று அதிகரிப்பது போன்றே நீங்களும் அதிகரித்திருக்கிறீர்கள். இருப்பினும் பல புதிய தொடர் கதைகளையும் சிறப்பிதழ்களையும் அறிவித்துள்ளீர்கள். அதனைக் கண்டுதான் மனத்தினை அமைதிப்படுத்த வேண்டி யிருக்கிறது.

காரைக்குறிச்சி ஏ. சுப்பிரமணியன், (வாணிப்பிரியன்)

● விலைவாசி ஏகத்தாறுக ஏறி, வாழ்க்கை நடத்துவதற்கே தடுமாறிக் கொண்டிருக்கும் வேளையில் போதாக் குறைக்கு கல்கியின் விலையை 75 பைசாவிலிருந்து 90 பைசாவுக்கு ஏற்ற எண்ணியிருக்கும் கொடுமையை வெகுவாகக் கண்டிக்கிறேன். முடிவைப் புனராலோசனை செய்க!

அறந்தாங்கி வீரராகவன்

● ''தமிழா! பெருமைப்படு!'' தலையங்கம் சற்று மிகையாக எழுதப்பட்டிருப்பதுபோன்று தோன்றினாலும், உண்மையைப் பட்டவர்த்தனமாக ஒளிவு மறைவின்றி எழுதியுள்ளீர்கள்.

சேவை தொடர வேண்டுகிறேன்.

வேலூர் டி. எஸ். சுகுமாரன்

நேர் எதிரியான ஜனதா(எஸ்) அமைச்சரவையில் அங்கம் வகித்துக் கொண்டே ஜனதாவோடு உடன்பாடு என்பது பாலுக்கும் காவல்—பூனைக்கும் தோழன் என்பது போல் உள்ளது.

பெங்களூர் ப. மூர்த்தி

● இந்திரா உங்களுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் ''தமிழன்'' கருணாநிதியை நீங்கள் புறக்கணிக்கக் கூடாது. தங்கள் தலையங்கத்தைப் படித்ததும் உங்கள் மீது ஆத்திரம், ஆத்திரமாக வந்தது.

வேலூர் (சேலம்) லட்சுமி செங்குட்டுவன்

● அட்டைப் படம் கண்டு ஆனந்தம் கொண்டேன். என் அருமை 'கவாஸ்கர்' பெயர் உலகப் புகழ் பெற்றோர் வரிசையில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டும். இப்படிப்பட்டவரைப் பல பத்திரிகைகள் மறந்தாலும் 'கல்கி' மறக்காமல் இருக்கிறதே!

தென்னலப்பாக்கம் எஸ். எஸ். வாசன்

● நம் காப்டனுக்கு மிக உயர்ந்த பதவியான 'அட்டைப் பட'த் தகுதி கொடுத்தீர்கள். இருப்பினும் பதினோரு வார்த்தைகளில் (மூன்றேகால் வரியில்) மிகக் கஞ்சத்தனமாக விளக்கங்கள் எழுதியதை எங்களால் கொஞ்சம் கூடச் சகித்துக் கொள்ள இயலவில்லை.

சென்னை-88 டி. சுப்பிரமணி

● தங்கள் காதல் சிறப்பிதழில் (16-9-79) 49ம் பக்கத்தில் ''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று இந்தோனேஷிய மொழியில் சொல்லும் விதம் ''ஸாஜா கஸிஹ் ஸெதாரி'' என்று எழுதியிருப்பது சரியல்ல. சரியான மொழிபெயர்ப்பு: ''சாயா மென்ஸின்தை கௌ''

மேடான் (இந்தோனேஷியா) டி. சீனிவாசன்

ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்தின் 35 வது பீடாதிபதி அனந்த ஸ்ரீ அபினவ வித்யா தீர்த்த மகா சுவாமிகள் பட்டத்துக்கு வந்து இம்மாதம் பத்தாம் தேதியோடு இருபத்தைந்து ஆண்டுகள் பூர்த்தியடைந்தது. இம்மகான் பற்றியும், இம்மகானின் அருள் பெற்று நடக்கும் தொண்டுகள் குறித்தும் திரு வைத்திய சுப்பிரமணிய அய்யர் அவர்களைச் சந்தித்து விவரம் கேட்டபோது பக்தி பரவசத்துடன் அவர் சொன்னது:

''ஸ்ரீ ஸ்வாமிகள் பட்டாபிஷேகம் பெற்று இருபத்தி ஐந்து ஆண்டுகள் பூர்த்தியாகும் வைபவம் இம்மாதம் பதினைந்தாம் தேதியிலிருந்து பெங்களூரில் கொண்டாடப்படுகிறது. சிருங்கேரியிலும் பங்களூரிலும் ஸ்ரீசாரதா தேவிக்குக் கோடி அர்ச்சனை, மற்றும் அதிருத்ர மகா யக்ஞம்,சண்டி யக்ஞம், காயத்ரி ஹோமம் ஆகியவை நடத்தப்படுகின்றன. இம்மாதம் 19ந் தேதி கர்நாடகா முதல்வர் ஆந்திரா முதல்வர், கர்நாடகா ஆளுனர் ஆகியோர் பங்கேற்கும் ஒரு கூட்டம் நடை



# சிருங்கேரி மடத்தில் சிறப்பான வைபவம்

பெறுகிறது. அதோடு, வித்வான்களின் சதஸ், தர்ம சம்மேளனம், சாகித்ய சம்மேளனம், ஸ்ரீ சங்கரரைப் பற்றிய ஒரு கருத்தரங்கு ஆகியவையும் பெங்களூரில் நடக்கவிருக்கின்றன.

இது ஒரு மகா வைபவம்.

சிருங்கேரி மடத்து பீடாதிபதிகள், வேத வழிபாட்டில் முக்கியத்துவம் செலுத்தி வருபவர்கள். நமது ஹிந்து மத வேதங்களை நாம் படித்தால் மட்டும் போதாது, அவற்றில் கூறியபடி வாழ்க்கை முறையை அனுஷ்டிக்க வேண்டும் என்கிற கருத்தைப் பரப்பி வருபவர்.

வேதங்களையும், வேதாந்தங்களையும் கற்பிக்கும் பணிக்காக சிருங்கேரி மடத்தின் சார்பில் ஹரித்வார், கயா, பஞ்சவடி, கோகர்ணம், பெஜவாடா, திருப்பதி, திருச்சி, ராமேஸ்வரம் ஆகிய இடங்களில் இயங்கும் வேதப் பள்ளிகளைச் செவ்வனே பராமரித்துச் சிறப்புற இயங்கச் செய்து வருகிறார்.

பண்டிதர்களைக் கௌரவித்துப் பரிசு வழங்குதல், ஸ்தல யாத்திரை போகும்போது பண்டிதர்கள் பங்கேற்கும் வாக்கிய அர்த்த சதஸ் ஏற்பாடு செய்து ஆன்மீக நெறியைப் பரப்புதல் ஆகியவற்றில் ஸ்வாமிகள் பெரும் ஆர்வம் கொண்டு செயல்படுகிறார்.

இவர் பாரதம் முழுவதும், நேபாளத்துக்கும் இருமுறை திக்விஜயம் செய்துள்ளார். தெய்வ நெறியை மக்களிடையே சிறந்தோங்கச் செய்துள்ளார்.

ஆன்மிகப் பணியுடன் பல சமூகப் பணிகளிலும் ஸ்வாமிகள் தம்மைப் பிணைத்துக் கொண்டுள்ளார்.

காலடியில் உள்ள ஸ்ரீ சங்கரர் கோவிலை நிர்வகிக்கும் பணியையும் , அங்குள்ள ஸ்ரீ கிருஷ்ணர் கோவிலை நிர்வகிக்கும் பணியையும் ஸ்வாமிகள் ஏற்று நடத்தி வருகிறார்.

ஆர்வம் உள்ள மாணவர்கள் சம்ஸ்கிருதம் கற்பதற்காகக் காலடியில் ஸ்ரீ சங்கரா கல்லூரி ஏற்படுத்தப்பட்டுள்ளது. இக் கல்லூரியில் மற்ற பாடங்களும் போதிக்கப்படுகின்றன. இம்மாதிரியே பெண்களுக்காக சிருங்கேரியில் ஓர் உயர்நிலைப் பள்ளி ஏற்படுத்தி மற்ற பாடங்களும் சம்ஸ்கிருதமும் கற்க ஸ்வாமிகள் வசதி செய்து கொடுத்துள்ளார்கள்.

ஏழைகளுக்கு மருத்துவ வசதி செய்து கொடுக்கும் பணிக்காகச் சமீபத்தில் சிருங்கேரியில் ஒரு மருத்துவ நிலையத்தையும் ஸ்வாமிகள் தொடங்கி நடத்தி வருகிறார்கள். அதோடு ஆயுர்வேத வைத்திய முறையை ஆராய ஓர் ஆராய்ச்சி நிலையத்தையும் ஏற்படுத்தி உள்ளார்கள்.

இம்மகான் மேலும் பல காலம் நமக்கெல்லாம் அருள் பாலிக்க நாம் பிறவிப் பயன் பெற வேண்டும் என்பதே சிஷ்ய கோடிகளின் பிரார்த்தனை.''

பேட்டி: சங்கா

# வைரங்கள்

## அத்தியாயம் 12
## இன்னும் சில சிக்கல்கள்

**சுஜாதா**

கலெக்டர் ஆபீஸ் கட்டிட மர நிழலில் பெரியசாமி, திலகம், மனோகரி மூவரும் நின்று கொண்டிருந்தார்கள். ரத்தினத் துக்கு லீவு கிடைக்கவில்லை. வெள்ளிக் கிழமை பெரியப்பாவுடன் வருவதாகச் சொல்லி விட்டுச் சிங்காநல்லூர் திரும்பிப் போய் விட்டான்.

பலர் உள்ளே போய் வந்த வண்ணம் இருந்தார்கள். கலெக்டர் ஆபீஸ் கட்டிடமே என்னுடையது என்கிற பாணியில் ஒரு நாய் தலையை உயர்த்தி விரைந்து கொண்டிருந்தது. சர்க்கார் கட்டிடங்களில் தவிர்க்க முடியாத ஒட்டுண்ணிகள் உலவ, கையில் பத்திரத்துடன் பெரியசாமி புரியாமல் விழித்தான். அங்குள்ள பலரைப் பார்த்தால் அவனுக்கு கலெக்டர் போலத்தான் தோன்றினார்கள். கலெக்டரை அவ்வளவு சுலபமாகச் சந்திக்க முடியாது என்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தது. மனோகரி அந்த நாயைச் சுவாரஸ்யமாகக் கண்களால் தொடர்ந்து கொண்டிருந்தாள். திலகம் தன் கணவனைக் கண்களால் தொடர்ந்து கொண்டிருந்தாள்.

ஷோக்காகச் சட்டை போட்டுப் படிய வாரின ஆசாமி ஒருத்தன் சற்று நேரம் இவர்களைக் கவனித்து விட்டு அருகில் வந்தான்.

''என்னங்க?'' என்றான்.

''அய்யா நான் கலெக்டரைப் பார்க்கணும்!''

''பார்த்துட்டாப் போச்சு. என்ன விஷயம் வாங்க. ஏன் நிக்கறீங்க? வராந்தாவில் பெஞ்சு போட்டிருக்குதில்லே?''

''இருக்கட்டுங்க.''

''என்ன விசயம் சொல்லுங்க.''

பெரியசாமி சற்றுத் தயங்கி ''என் நெலத்தைப் பிடுங்கிக்கிட்டாங்க'' என்றான். அவன் தன் பையிலிருந்து சீப்பு எடுத்து ஒருமுறை வாரிக் கொண்டு ஒருமுறை அதை 'டிர்ரிங்' என்று வாசித்து விட்டு ''யாரு?'' என்றான். சீப்பை உள்ளே சொருகினான்.

''நெடுப்பாக்கம் பஞ்சாயத்துலங்க!''

''அது எங்கே இருக்கு நெடுப்பாக்கம்?''

''மேக்காலங்க.''

''உன் சொந்த நிலமா?''

''ஆமாங்க.''

''அது எப்படிய்யா? பத்திரம் கித்திரம் கிடையாதா?''

''இருக்குதுங்க. அந்த கெரணம் என் சொல்றீங்க! உன் நிலம் அங்கே இல்லே தள்ளிக் கெடக்குதுன்னு ரெண்டர்த்தமாகச் சொல்றுங்க. தூரத்திலே வேற எடத்தைக் காட்டறுங்க. தரிசுங்க!''

''பத்திரத்தைக் காட்டுங்க பார்க்கலாம்!''

அந்த இளைஞன் அதை வாங்கி ஒரு தடவை திலகத்தைக் கடைக்கண் பார்த்துவிட்டுத் தீவிரமாகத் தன் வாழ்க்கைப் பிரச்னையே அதில் அடங்கி யிருக்கிறது போலப் பார்த்தான்.

''ஹூம்!'' என்று பெருமூச்சு விட்டான். ''ஒரு காகிதம் இருக்குதா?''

''இல்லீங்க.''

அவன் அங்கே இங்கே பார்த்துவிட்டுத் தரையில் இருந்து ஒரு பஸ் டிக்கெட்டைப் பொறுக்கித் தன் பையிலிருந்து பென்சில் எடுத்துப் பத்திரத்திலிருந்து முக்கியமாக ஏதோ குறிப்பெடுத்துக் கொண்டான்.

''சர்வே நம்பர் எழுதிக்கிட்டு இருக்கேன். இந்தாங்க பத்திரம். பத்திரம். கொஞ்சம் இங்கேயே இருங்க. ரிக்கார்ட்ஸ் பார்த்து விட்டு வந்துடறேன்'' என்று அவன் கட்டிடத்தின் உள்ளே சென்று மறைந்தான்.

பெரியசாமி காத்துக் கொண்டிருந்தான்.

''இவரு யாரு?'' என்றாள் திலகம்.

''தெரியாது.''

''தெரியாமத்தான் இம்புட்டுப் பேச்சா?'' சிரித்தாள்.



''சும்மா இரு. கலெக்டருக்குத் தெரிஞ்சவராட்டம். இங்கே வேலை செய்யுறவரா இருக்கும். உள்ள போயிருக்காரே. என்னதான் சொல்லுவான் பார்க்கட்டும்!''

உள்ளே போனவன் நேராகக் காரிடாரைக் கடந்து கட்டடத்தின் பின்புறம் வந்து அங்கிருந்து வேலி வரை நடந்து மர நிழலில் வேலி ஓரம் இருந்த தற்காலிகக் கடையில் ஒரு கத்திரி சிகரெட் வாங்கிப் பற்ற வைத்து நிதானமாகப் புகைத்தான்.

''காசு?'' என்றாள் கடைக்காரப் பெண்.

''இந்தா! நீ எங்கே போறே, நான் எங்கே போறேன்!''

''மொத்தம் அறுபத்தி அஞ்சி யாச்சு!''

''ஒரு ரூவா ஆனதும் சொல்லிப் போடு கண்ணு!'' என்று அவள் கன்னத்தில் தட்டினான். பன்னிரண்டு வயசுப் பெண். கண்ணில் நிறைய மையிட்டிருந்தாள்.

சிகரெட்டைக் குடித்து முடித்து விட்டு அருகில் நின்றவரிடம் மணி கேட்டுக் கொண்டான். புறப்பட்டுத் திரும்பவும் பெரியசாமியிடம் வந்தான்.

''ரிக்கார்ட்டைப் பார்த்தேன். பஞ்சாயத்துல செய்தது தப்புத்தான் அண்ணே!''

பெரியசாமி பிரகாசமாகி ''பார்த்தீங்களா?'' என்றான். திலகத்தைப் பார்த்துக் கொண்டான்.

''இருந்தாலும் ஆர்டர் போட்டிருக்குது இல்ல! நீங்க ஒண்ணு செய்யுங்க. எதுக்கும் அவங்க கொடுத்த நிலத்திலே போய் டேரா போட்டுருங்க. குந்திக்குங்க. கூடவே ஒரு மனுப் போட்டுறலாம் கலெக்டருக்கு. பதினைஞ்சு நாளிலே ஆர்டர் வந்துரும். திரும்ப உங்க நிலத்துக்குப் போயிறலாம்.''



"மனு எங்க கிடைக்கும்?"
"எழுதித் தரணும்."
"யாரு? எனக்கு எழுதத் தெரியாதுங்களே?"
"எல்லாம் நான் ஏற்பாடு செய்து தரேன். அப்புறம் கொஞ்சம் தனியா வாங்க!"
தனியாக அவனைப் பக்கத்திற்கு அழைத்துச் சென்று அவன் தோள் மேல் கை போட்டு "இருபத்தி அஞ்சு ரூபா எடுங்க" என்றான்.
"எதுக்கு?"
"குமாஸ்தாவுக்குக் கொடுக்கிறதுக்கு. அப்புறம் மனு டைப் அடிக்கணும்ல? எனக்கு ஒரு பைசா வேண்டாம்."
பெரியசாமி தன் சட்டைப் பையில் இருந்த பணத்தை எல்லாம் எண்ணிப் பார்த்தான்.
"இருபத்தி நாலுதாங்க இருக்கு."
அதை அப்படியே அந்த இளைஞன் பிடுங்கி வாங்கிக்கொண்டு மடக்கிப் பனியனுக்குள் உள்ள பையில் போட்டுக் கொண்டான்.
"இன்னிக்குத் தேதி என்ன?"
"தெரியாதுங்க."
"சரியா இருபத்தி ஆறும் தேதி ஆர்டர் கிடைச்சுரும். இங்க வந்து வாங்கிக்கிறியா தபால் மூலமா அனுப்பிச்சுறவா? உங்க அட்ரஸ் என்ன?"
"அட்ரஸ் இல்லிங்களே. அதைத்தான் புடுங்கிட்டாங்களே. ராவிமுக்குலே இருந்தேன்."
"உன் பேரு என்ன சொன்னே?"
"பெரியசாமி."
"பெரியசாமி, ராவிமுக்குன்னு போட்டா வந்துருமா?"
"தபால்காரர் கிட்டச் சொல்லிப் போடறேனுங்க."
"என் கூட வா! மனு டைப் அடிக்கணும் பாரு." கட்டடத்தை விட்டு வெளியே வந்து, சாலையைக் கடந்து தட்டி நிழலில் ஒரு புராதன ஆசாமியிடம் சென்று நின்றான். "கலெக்டருக்கு ஒரு அப்ளிகேஷன் அய்யரே! ராமையர் கோர்ட்டிலே இருந்தவரு. நல்ல ஸ்ட்ராங்கா அப்ளிகேஷன் அடிச்சுக் குடுப்பாரு! இது பெரியசாமி. நிலத் தகராறு. உட்காருங்கம்மா. நிக்கறீங்களே! சொல்லுங்க பெரியசாமி!"
பெரியசாமி தரையில் உட்கார்ந்து கொண்டு விசனமாகப் பேசினான். "எங்கப்பாரு நெலங்க. பூர்விகமா வந்தது. இருவது வருஷமா ஒருத்தன் கேட்டதில்லே..."

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

நடிகை1: "தீபாவளிக்கு உன் கைப்பட நீயே பட்டாஸ் வெடித்தியா...?"
நடிகை2: "ஊஹூம், பட்டாஸுனாலே எனக்குப் பயம்! எனக்கு பதிலாக வேலைக்காரி செல்லாயி தான் வெடித்தாள்!"
— உ. ராஜாஜி



என்று நான் நிலமிழந்த கதையைச் சொல்ல அய்யரின் ஆர்த்ரைட்டிஸ் இயந்திரம் டக்டக் டக் என்று இயங்கத் துவங்கியது.
புரியாத ஆங்கில எழுத்துக்களில் கடைசியில் விரலில் மசி தடவிப் பதித்து வாங்கிக் கொண்டு "அப்ப நான் வரேன் பெரியசாமி! நீங்க ஒண்ணுக்கும் கவலைப்படாதீங்க." பேசிக்கொண்டே ஐயருக்கு இரண்டு ரூபாய் கொடுத்தான். மனுவை எட்டாக மடித்துப் பைக்குள் போட்டுக் கொண்டான்.
பெரியசாமி சற்றும் தீர்மானமில்லாமல், "எதுக்கும் கலெக்டரை ஒரு தடவை பார்த்துட்டுப் பேசிற முடியுமுங்களா?" என்று கேட்டான்.
"கலெக்டரா? அவரு ஊர் போயிருக்காரு. வர ஒரு வாரமாகும். ஒரு வாரத்தில உனக்கு ஆர்டர் வரலை, நேர இங்கே வந்து பாரு என்னை. நீ எங்க போறே நான் எங்கே போறேன். என்ன?"
"சரிதாங்க."
அவர்கள் பேசிக் கொண்டிருக்க கலெக்டர் தம் ஃபியட் காரில் வந்து இறங்கி உள்ளே சென்றார்.
"அப்ப நான் வரட்டுங்களா?" என்றான் பெரியசாமி.
"தாராளமாக."
சற்றுத் தயங்கி "இருக்கிற காசு அம்புட்டும் கொடுத்துட்டேனுங்க. திரும்பிப் போக பஸ் சார்ஜுக்குக் காசு வேணும்" என்றான்.
"உங்க ஊருக்கு சார்ஜ் எத்தனை?"
"தெரியாதுங்க."
"இந்தா ஒண்ணரை ரூபா வெச்சுக்க!"
திலகத்தையும் மனோகரியையும் அழைத்துக்கொண்டு பெரியசாமி பஸ் நிலையத்தை நோக்கி நடந்தான்.
ஒன்றரை ரூபாய் போதவில்லை. ஒண்டிப்பட்டியிலேயே இறக்கி விட்டு விட்டார்கள். பதினைந்து மைல் நடக்க வேண்டியிருந்தது.

அன்புள்ள ஐயா,

சமீபத்தில் ராவிமுக்கு என்கிற இடத்தில் நெடுப்பாக்கம் பஞ்சாயத்து நிலத்தில் மக்னீசியம் மாங்கனீஸ் முதலிய கனிஜங்களைத் தோண்டுவதற்காக உங்கள் அலுவலகத் திருவல் ப்ரேம்சந்த் அகர்சந்த் என்பவருக்கு ஒரு பிராஸ்பெக்டிங் லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த இடத்தில் வைரங்கள் கிடைப்பதாக ஆதாரபூர்வமான தகவல்கள் கிடைத்திருக்கிறது. வைரங்கள் தோண்டப்பட்டுத் திருட்டுத்தனமாக பம்பாய்க்குக் கடத்திச் செல்லப்படுகிறது. இதனால் அரசாங்கத்துக்கு ஏற்படும் வருமான இழப்பைக் கணக்கிடுவதற்கில்லை. இதனை உடனே விசாரித்து அந்த இடத்தைச் சர்க்காரே எடுத்துக்கொள்ளும்படி கோருகிறேன்.

இங்ஙனம் வி. சதாசிவ ராவ்

●

கடிதம் கலெக்டர் ஆபீசுக்கு வந்து அதைக் கலெக்டர் அப்படியே மாநில ஜியாலஜிஸ்ட்டுக்கு அனுப்பி விருந்தார். அதில்
The area has been extensively surveyed by GSI and SGD. There are no diamonds in that

# மலர் முகத்தைத் துவட்டிட மலரினும் மென்மையான துண்டுகள்



area not even industrial diamonds. If you so desire you may cancel the PL and seal off the land. We'll do a resurvey. But I have my doubts.

என்று எழுதியிருந்தார் ஜியலஜிஸ்ட்.

இதன் கீழ் ஆணைக்காக என்று ஒரு உப கலெக்டரின் வாசகத்துக்குக் கீழ் கலெக்டர் குறிப்பு:

''லைசென்ஸ் கொடுத்தவரை சரி. இனி புதுப்பிக்க வேண்டாம். இப்போதைக்கு அவன் தோண்டுகிறவரை தோண்டட்டும்.

ஒரு முறை நான் சென்று பார்க்கிறேன். கடிதத்துக்குத் தக்க பதில் தரவும்.

ஒப்பம்

o

சீனிவாச சர்மா யோசனையில் ஆழ்ந்தார். அவர் எதிரே ப்ரேம் நடந்து கொண்டு கையைக் கையுடன் ஓங்கிக் குத்திக் கொண்டிருந்தான்.

''இதுவரைக்கும் மொத்தம் நாப்பதாயிரம் ரூபாய் கர்ச் பண்ணிப்பிட்டேன் ப்ரொபசர்! மிஹும்... ஒரு கல்லு? ஒரு கல்லு கிடைக்கலியே! என்ன ஆழம் தோண்டறது எங்க தோண்டறது? வெறும் கருப்புக் கருப்பா கட்டிதான் வருது லாலா! எங்கப்பா சொன்னார், அந்த வியாபாரம் வேண்டாம்னு!''

''இத பாரு ப்ரேம்! பொறுமை நிறைய வேணும்! அப்படி சட்டுனு கிடைச்சுருது! நான் சொன்னேன் பாரு பைப் லைன். அது மட்டும் எங்கே இருக்குன்னு கண்டுபிடிச்சுட்டா...?''

''பாருங்க ப்ரொபசர்! இந்த பைப்லைன் கதி கேட்டு கஸ்த் ஆயிடுச்சு! உங்களை டைரக்டராப் போட்டு மாசம் ஆயிரம் கன்ஸல்டன்ஸி வேற தண்டம்!''

ப்ரொபசருக்கு முகம் கடுமையாக ''இத பாரு சேட்! நானு உங்கிட்ட வரல. நீதான் என்னைக் கெஞ்சிக் கேட்டுக்கிட்ட!'' என்றார்.

''கோவிச்சுக்காதீங்க ப்ரொபசர்! இப்ப நீ என்ன சொல்றீங்க? கடிக்குமா கடிக்காதா?''

''எனக்கு மறுபடி அந்தக் கல்லைப் பார்த்தாகணும். ஒரு செகண்ட் ஒபினியனுக்கு!''

''எந்தக் கல்லு?''

''முதல்ல எங்கிட்டக் காட்டினியே?''

''அனுக்கு வைரம்?''

''அதான். கொண்டுவா அதை!''

''அதைத்தான் எங்கேயோ வைச்சேன்னு யோசிக்கிறேன். லாலா! சமஜ் மே நை ஆத்தா ஹை!''

''என்னது? அதைக் காணுமா?''

''ஆமாம்.''

''ஏய்! என்னடா சொல்றே? அது நல்ல வைரமா இருந்தா லட்சக் கணக்கிலே அதுக்கு மதிப்பு இருக்கும்டா!''

''அது நல்ல வைரமா இருந்தா! ப்ரொபசர், எனக்கு என்னவோ ஒரு விசியம் உதைக்குது. அந்த இடத்தில அவ்வளவு வைரம் இருந்தா கவர்ன்மெண்ட் சும்மா விடுவாங்களா? மத்ய பிரதேசில பன்னாவுலே எவ்வளவு தோண்டுறாங்க. அந்தமாதிரி அங்கேயும் கண்டுபிடிச்சுத் தோண்டியிருக்க மாட்டாங்களா? வெள்ளைக்காரன் விட்டு வைச்சிருப்பானு? அதுக்கப்புறம் இண்டியா கவர்மெண்ட்டு அப்படி சுலபமா லைசென்ஸ் கொடுத்துடுமா?''

''இத பார், நான் ஜியாலஜி டிபார்ட்மெண்ட்ல இருந்தவன். எனக்கு இதெல்லாம் நல்லாவே தெரியும். டிபார்ட்மெண்டுலே இந்த ஏரியாவெ சரியா சர்வே பண்ணலே. எனக்குத் தெரியும்.''

''எப்படியோ, நாம ரெண்டு வாரமா தோண்டிக்கிட்டு இருக்கம். களி மண்ணு உருண்டைதான் கெடைக்குது, நாப்பதினாயிரம் ரூபா செலவு பண்ணியாச்சு!''

''பைப்! அந்த வைரப் பைப் மட்டும் கிடைச்சுட்டாப் போதும்.''

அவர் போனதும் ப்ரேம் சின்னியைக் கூப்பிட்டான்.

''மேஜை மேலே ஒரு கல்லைக் கட்டி வெச்சிருந்தேன் பார்த்தியா சின்னி?''

''தெரியாதுங்களே! நான் உங்க மேஜை மேலே எதுவும் தொடறது இல்லீங்க!''

சின்னி ப்ரேமின் அறையைச் சுத்தம் செய்யும்போது அந்தக் கல்லைப் பார்த்திருந்தாள். அதை எடுத்து இது எதுக்கு அனுக்குக் கல்லு மேசை மேலே கிடக்குது என்று ஜன்னலுக்கு வெளியே சாக்கடையில் எறிந்துவிட்டாள். அதை இப்போது அவனிடம் சொன்னால் கோபித்துக் கொள்வான். அவன் கோபப்படக் கூடாது. அவனிடம் சொல்ல வேண்டிய இன்னொரு முக்கிய விஷயம் இருக்கிறது.

''என்ன சின்னி நிக்கிறே?''

''எசமான், எசமான்! நம்ப விசயம்.''

''என்னது?''

''ஒரு மாதிரி ஆயிடுச்சுங்க!''

''ஒரு மாதிரின்னு? என்ன, சமஜ்ல வர்ற மாதிரி சொல்லு.''

''நான் முழுகலிங்க!''

''முழுகல மதலப்?''

சின்னி பெரிசா அழ ஆரம்பித்தாள். ப்ரேம் சுற்று முற்றும் பார்த்து, ''இத பாரு சின்னி! ஓர்ரி பண்ணாதே. நான் எல்லாத்தையும் கவனிச்சுக்கறேன்! இப்ப என்ன ஆயிடுச்சு! பெரிய சர்க்கார் கிட்ட மட்டும் சொல்லிடாதே. இந்தா ரூபா வெச்சுக்கோ...''

ப்ரேமுக்குக் கைகள் இன்னும் நடுங்க ஆரம்பித்தன. எத்தனை சிக்கல்கள்! இந்தப் பெண்ணை என்ன செய்வது?... யாரைக் கேட்பது? தாயையா? ஆம்! இல்லை. டாக்டரை?

ப்ரேமுக்கு மற்றொரு சிக்கல் இப்போது உருவாகிக் கொண்டிருந்தது. காதல்!

(தொடரும்)

---

அவன்: ''எம். எல். ஏ. விடமிருந்து சிபாரிசுக் கடிதம் கொண்டு வந்திருக்கேம்பா!''

டெய்லர்: ''எதுக்கு...?''

அவன்: ''தீபாவளிக்கு ஒரு மணி நேரம் முன்னதாகவாவது என் டிரஸ்ஸெல்லாம் நீ தைத்துத்தரும்படி...!''

- உ. ராஜாஜி



# கடல் ராணி

சாண்டில்யன்

## அத்தியாயம் 12

## காற்றினில் கலந்த கீதம்

**கா**ரிருளின் கடுமை எங்கும் கடுமையாகச் சூழ்ந்திருக்க நள்ளிரவு முற்றியதன் காரணமாகக் கடலலைகள் பயங்கரமாக எழுந்து படகை ஆகாயத்தில் தூக்குவது போல் தூக்கியும், மீண்டும் பாதாளத்தில் அழுத்துவது போல் இறக்கியும் விளைவித்த இயற்கையின் கோரம் இதயத்தை உலுக்க, சிந்து துர்க்கத்திலும் பாண்டவர் கோட்டையிலுமிருந்த பெருங் கட்டிடங்களும் உயர்ந்து வளைந்த தென்னை மரங்களும் ஏதோ பெரிய பிசாசுகளைப் போல் விழித்து நிற்க, தங்கள் தலைவி ஒரு கொடிய கொள்ளைக்காரனால் கொண்டு போகப்படுவதை உணர்ந்ததைப் போல் சிந்து துர்க்கத்தின் கலங்கரை விளக்கத்தின் ஒளி அகல் விளக்கின் ஒளியைப் போல் மங்கி அலைந்து அலைந்து விழித்துத் தவிக்க, எங்கும் எப்படியும் தப்புவதற்கு வழியில்லாத நிலையில் அனந்த் எதற்காக வில்வரைப் பாடச் சொன்னான் என்பது ராணிக்குப் புரியவில்லை. அவன் தான் சொன்னான் என்றால், அந்த மரக்கால் வில்வர் எதற்காகக் கரகரத்த தனது பயங்கரக் குரலை உயர்த்திப் பாட வேண்டும் என்பதும் விளங்கவில்லை அவளுக்கு. இத்தனையிலும் அவள் கையிலிருந்த துப்பாக்கியை டெய்லரின் முகத்துக்கு நேராகப் பிடித்துக் கொண்டு படகின் அத்தனை எழுச்சி தாழ்ச்சியிலும் ஆடாமல் அசையாமல் சிலை போல் உட்கார்ந்திருந்தாள்.

வில்வர் மிகப் பெரிதாக அனந்த் கேட்ட பாட்டைப் பாட ஆரம்பித்தான். தன் குரலுக்கு அடுத்தபடிதான் அலைகளின் இரைச்சல் என்பதை அவன் காட்டியதோடல்லாமல் பாட்டின் வரிகளும் கடலின் பயங்கரத்துக்கு என்னளவும் குறைந்ததல்லவென்பதையும் வில்வர் நிரூபித்தான். அந்தப் பயங்கரப் பயணத்தின்போது அவன் பாடியது ஆங்கிலக் கொள்ளைக்காரர் பாட்டு. அதன் வரிகளில் பயங்கரச் சாவுகளும் பொக்கிஷமும் கலந்திருக்கிறதென்பதை ராணி புரிந்துகொண்டாள் எளிதில்.

'Fifteen men on the dead man's chest—
Yo-ho-ho- and a bottle of rum!
Drink and the devil had done for the rest
Yo-ho-ho, and a bottle of rum!'

''இறந்தவன் பெட்டி மீது பதினைந்து பேர், குடியும் பேயும் மற்றதைத் தீர்த்தன என்ற இரண்டு வரிகளில் பயங்கரக் கதை கலந்திருக்கிறது. யோ ஹோ ஹோ ஒரு புட்டி ரம் என்பதில் கொள்ளைக்காரர் குடிப் பழக்கமும் வெறியும் பாட்டுக்குச் சந்தமும் சேர்ந்திருக்கிறது'' என்று ராணி தனக்குள் சொல்லிக்கொண்டாள். அந்தப் பாட்டை 'ரம்'மைக் குடித்து விட்டவன் போல் தாளம் தவறாது, சந்தம் தவறாது திரும்பத் திரும்பப் பாடினான் வில்வர். அவன் பாட்டுக்கு அலைகள் பலேல் பளேல் என்று படகின் பக்கவாட்டில் அறைந்து தாளம் போட்டன. அவற்றின் பேரிரைச்சல் அவன் குரலுக்குச் சுருதி கூட்டின.

அலைகளும் இருளும் அவன் பாட்டும், பாடும்போது அவன் ஆடிய வேகமும் நாழிக்கால இரைச்சலும் கூத்தும் பாட்டும் கிட்டத்தட்ட இப்படித்தான் இருக்குமென்பதை ராணிக்கு நினைவூட்டியது. வில்வரின் வெறி கலந்த பாட்டுக்கும் கொம்மாளத்துக்கும் ராணி சிறிதும் அசையவில்லை. ஆனால் கடலின் சூழ்நிலையோ அல்லது கொள்ளைக்காரன் வெறியோ தெரியவில்லை, இருமுறை வில்வர் பாடியதும் மூன்றாம் முறை டெய்லரும் அந்தப் பாட்டில் கலந்து கொண்டான். படகில் ஏறியவரை இடித்த புளி போலும் இரும்பு போலும் உணர்ச்சி ஏதுமின்றி நின்றிருந்த டெய்லர், வில்வர் பாடத் தொடங்கியதும், அதற்குச் சரியாக இரு முறை ஆடத் தொடங்கினான். அவன் கையிலிருந்த துடுப்புக்கள் கூட வில்வரின்

பாட்டுக்குத் தாளம் போடுவன போல் அதற்கு இணைந்து இணைந்து கடல் நீரைத் துழாவித் துழாவி எழுந்தது. அப்படி துடுப்புக்கள் ஆடிய நிலையில், டெய்லர் தனது வாயைத் திறந்து ''யோ — ஹோ— ஹோ — அண்ட் எ பாட்டில் ஆஃப் ரம்'' என்று பாடினான். பிறகு முழுப் பாட்டிலும் கலந்துகொண்டு வில்லரோடு சேர்ந்து கொண்டு கத்தினான்.

சில முறை முழுப் பாட்டையும் டெய்லர் பாடினான். சில முறை ஒரு அடி விட்டு இன்னொரு அடியில் கலந்து பாகரங்களில் முன்னடி பின்னடி சந்தை சொல்வது போல் ''யோ — ஹோ ஹோ— அண்ட் எ பாட்டில் ஆஃப் ரம்'' என்று மட்டும் கூவினான். தொண்டை கிழிய இரண்டு கொள்ளைக்காரர்களும் அலைகளின் இரைச்சலை அடக்க உறுதி கொண்டவர்கள் போல் கதறினார்கள். அத்தனை கதறலிலும் சந்தத்தையும் தாளத்தையும் விடவில்லை அவர்கள்.

சங்கீதத்தின் மகிமையை அப்பொழுது புரிந்து கொண்டாள் ராணி. கொள்ளைக்காரனாயிருந்தாலும், கொலைகாரனாயிருந்தாலும், எத்தனை கடின இதயமுள்ளவனாயிருந்தாலும், சங்கீதம் அனைவரையும் ஆட்டிப் படைக்கும் சக்தி வாய்ந்தது என்பதைப் புரிந்து கொண்டாள். இல்லாவிட்டால் ''ஜகப் பிரசித்தி வாய்ந்த டெய்லர் சங்கீதத்துக்கு மசிவானா?'' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள். அவர்கள் பாட்டின் உக்கிரத்திலும், பாடல் சொற்களின் பயங்கரத்திலும் ஏதோ ஒரு முறை ஒரு தாளக்கட்டு இருந்ததை அவள் கவனித்தாள். அந்தத் தாளக்கட்டு அலைகளின் சரேல் சரேல் என்ற தட்டுக்கு இம்மிகூடப் பிசகாதிருந்ததை அவள் கவனித்தாள். இயற்கை எப்படி எந்தக் கிராதகன் உடலிலும் சங்கீதத்தை ஊறவைத்திருக்கிறதென்பதை ராணி புரிந்து கொண்டதால் வியப்பும் அடைந்தாள். அவள் வியப்பு அத்துடன் நிற்கவில்லை. அதைப் பலமடங்கு உயர்த்த மற்றொரு நிகழ்ச்சியும் ஏற்பட்டது.

அதுவரை மௌனமாகவே பாட்டை ரசித்த அனந்தும் மற்ற இரு கொள்ளைக்காரர்களுடன் சேர்ந்து இரைந்து பாடத் தொடங்கினான். ரம் புட்டியைப் பற்றி வரும் வரிகளை அவன் பாடியபோது மற்ற இருவர் குரலும் அடங்கும்படியாகக் கத்தினான். அவன் பாடத் தொடங்வேதும் ''இவரும் இந்த மாதிரிக் கொள்ளைக்காரனோ?'' என்று தன்னைக் கேட்டுக் கொண்ட ராணி அடுத்த சில நிமிடங்களில் தன் கருத்தை மாற்றிக் கொண்டாள். அனந்தின் குரல் இரைந்த நிலையிலும் மிக மதுரமாயிருந்தது. மற்ற இருவரது குரல்களிலிருந்து மாறுபட்டு நின்றது. அவன் சாரீரம் உச்ச ஸ்தாயியில் கரகரப்புடன் ஒலித்தாலும் அதில் தம்புராவின் மந்தரத்தின் கரகரப்பு இருந்தது. வில்லரின் குரலாலும் டெய்லரின் குரலாலும் பயங்கரமாகத் தெரிந்த அலை ஓசையும் சீறிய காற்றின் ''ஜோ'' வென்ற சந்தமும்



கூட அவன் இன்ப சாரீரத்தால் இனிமையடைந்து விட்டதை ராணி கவனித்தாள். கடலில் கச்சேரி செய்வதற்கே பிறந்தவன் போல் அந்த ஆங்கிலப் பாட்டை அலை, காற்று ஆகிய இயற்கையின் ஆதார சுருதியுடன் இணைந்து பாடினான் அனந்த். அவன் சாரீரத்தால் அந்த ஆங்கிலப் பாட்டு அதன் வர்ண மெட்டும் கூடச் சிறப்படைந்தன. படகு செல்லச் செல்ல அனந்த் மிக மும்முரமாகப் பாடினான். அவன் பாட்டினால் வேகமடைந்த இதயங்களுடன் டெய்லரும் வில்வரும் பெருங் கூச்சல் போட்டு இசைத்தார்கள்;

அவர்கள் வேகம் படகுக்கும் காற்றுக்கும் கூட ஏற்பட்டிருக்க வேண்டும். காற்றின் வேகம் படகு முன்னேற முன்னேற அதிகமாயிற்று. அலைகள் பனைமர உயரத்துக்குக் கிளம்பின. இயற்கை கூட அனந்துடன் இணைந்து விட்டதாகத் தோன்றியது, ராணிக்கு. இருளும், அலைகளும் காற்றும், சேர்ந்த நிலையில் வானத்தில் மின்னிய நட்சத்திரங்களைப் பார்த்தாள் ராணி. அந்த நட்சத்திரங்கள் கூடக் கண்ணிமைப்பதை நிறுத்தி இசையை அனுபவிப்பன போல் தோன்றின ராணியின் கண்களுக்கு.

அந்தச் சமயத்தில் பாட்டை நிறுத்திய அனந்த். ''ராணி! வானத்தைப் பார்க்காதே! நீயும் பாடு'' என்று அழைக்கிறான்.

வானத்திலிருந்து கண்களை இறக்கி அனந்தைப் பார்த்த ராணி முடியாதென்பதற்கு அறிகுறியாகத் தலையை இரு புறமும் அசைத்தாள். அனந்த் விடவில்லை. ராணி அசையாமல் கையில் பிடித்திருந்த கைத் துப்பாக்கியைத் தன் கையில் பிடுங்கிக் கொண்டு, ''ராணி! பாடு! நீயும் கொள்ளைக்காரிதானே. பாட்டு ஆங்கிலப் பாட்டாயிருந்தால் என்ன?'' என்று கூறி அவளை அழைக்கிறான்.

அந்த இருளிலும் அனந்தின் கண்கள் பளிச்சிட்டதை ராணி கவனித்தாள். அவற்றிலிருந்து ஏதோ ஓர் ஒளி அவளுக்கு ஏதோ செய்தி சொல்லியதாகத் தோன்றியது. திரும்பத் திரும்ப அந்தப் பாட்டைக் கேட்டதால் பாட்டும் அவளுக்கு மனத்தில் பதிந்து கிடக்கவே அவள் முதலில் மெதுவாக ஆரம்பித்தாள். ''பிப்டீன் மென் ஆன் த டெட் மான்ஸ் செஸ்ட்'' என்ற ஆரம்ப வரியின் பயங்கரம் அவள் இனிமையான குரலால் இன்பமடைந்து இசையில் கழன்றது. மெல்ல மெல்ல அவள் சாரீரத்தை உயர்த்த உயர்த்த பாடலின்பம் ஆயிரம் முறை உயர்ந்தது. அந்தச் சாரீரம் காற்றைக்கூடக் கவர்ந்திருக்க வேண்டும். காற்றின் உக்கிரம் குறையவில்லை என்றாலும் அதன் ''ஹோ'' வென்ற ஓசை அவள் இன்ப சாரீரத்துக்குக் கீழ் ஸ்தாயி அமைப்பது போல் தோன்றியது. கைத் துப்பாக்கியை அனந்த் வாங்கிக் கொண்டு விட்டதால், அவள் தனது இரு கைகளாலும் தாளம் போட்டுப் பாடினாள். அந்தப் பயங்கர ஆங்கிலப் பாட்டை?

அவள் கைத்தட்டலுக்கு அலைகள் தாளம் போட்டன. அவள் அசைந்து ஆடி ஆடிப் பாடினாள். அந்த அசைவும் ஆட்டமும் பாட்டும் டெய்லரைக் கூடக் கவர்ந்ததால் அவன் பாடுவதை நிறுத்தி ''ஸிஸ்டர்! யூ ஸிங் வெரி வெல் (சகோதரி! நீ நன்றாகப் பாடுகிறாய்)'' என்று சொன்னதன்றி ''வில்வர் யூ ஃபூல் ஸ்டாப் யுவர் பிளாப்பர் (வில்வர், முட்டாள், நீ உன் உளறலை நிறுத்து)'' என்றும் கூவினான்.

வில்வருக்குப் பாட்டை நிறுத்தும் உத்தேசமில்லை. அந்தப் பாட்டு அவன் உடலில் ஊறியிருந்தது. இருப்பினும் டெய்லரின் கட்டளையை மீறவும் முடியாமல் ''ஊஹூம் ஊஹூம்'' என்று கறுவிக் கொண்டு தனது குரலை அடக்கிக் கொண்டான். ராணி மிக இன்பமாகப் பாடினாள். மெல்ல மெல்ல சாரீரத்தை உயர்த்தி மேல் ஸ்தாயிக்குச் சென்றாள். ''யோ— ஹோ—ஹோ— அண்ட் எ பாட்டில் ஆஃப் ரம்'' என்ற இடம் சிறிது கூடத் தாளம் தவறாமல் மேலே ரீங்கார த்வனியில் கலந்தது. சங்கீதத்துக்குக் கிழக்கு மேற்குக் கிடையாது; இசை கிடையாது. இரவு பகல் கிடையாது; மொழி கிடையாது. அதில் இழைவது தனிப்பட்ட ஒரு சொர்க்கம் என்பதை அனந்த் கூட அன்று உணர்ந்து கொண்டான். ராணி குரலை அநாயாசமாக சஞ்சரிக்க விட்டாள். அவளுக்கு ஆங்கில முறை சங்கீதமும் ஓரளவு தெரியும் என்பதை வில்வரும் டெய்லரும் கூட உணர்ந்து கொண்டார்கள். அவள் உடல் அசைவுக்குத் தகுந்தபடி அவ்விருவரும் அசைந்தார்கள். டெய்லர் படகைச் சரியாகத் துழாவவில்லை என்பதை அனந்த் கவனித்தான்.

காற்று பலமாக அடித்தது. அதை விடப் பலமாக எழும்பியது ராணியின் குரல் உச்ச ஸ்தாயியில். அவள் தாளக்கட்டு பிரமாதமாயிருந்தது. ''பிப்டீன் மென் ஆன் த டெட் மான்ஸ் செஸ்ட், செஸ்ட், செஸ்ட்'' என்று மும்முறை ''செஸ்டை''த் தட்டிக் காட்டினாள். அதில் ஒரு தனிப் பக்குவமிருப்பதை வில்வர் கவனித்தான். 'ப்யூட்டிபுல்' என்று கூறினான்.

காற்று அவள் கீதத்தைக் கவர்ந்து சென்றது. அவள் மட்டும் அப்பொழுது பாடிக் கொண்டிருந்தாள். சற்று லேசாக கர்நாடக இசை முறையையும் அந்த ஆங்கில சங்கீதத்தில் கலந்தாள். அதனால் மெருகு ஏறிய சங்கீதத்தில் லயித்துக் கிடந்தான்



டெய்லர். அவ்வளவு இனிய சங்கீதத்தை அனந்த் காதில் வாங்கிக் கொண்டிருந்தாலும் இடையிடையே ஆகாயத்தையும் கவனித்தான். பிறகு மற்ற இருவரும் ராணியின் முகத்தில், உதடுகளின் அசைவில் ஈடுபட்டிருந்த சமயத்தில் லேசாகத் திரும்பிப் பார்த்தான். பின்னால் விரிந்த காட்சியால் திருப்தி அடைந்து இயற்கையின் உதவி இசைக்கு எத்தனை தூரம் கிடைக்கிறது என்று எண்ணினான். அந்த எண்ணத்தால் படகில் நன்றாகச் சாய்ந்து கொண்டான். அவன் சாய்வதை டெய்லர் காணவில்லை என்றாலும் வில்வர் கண்டதால் சட்டென்று எழுந்திருக்க முயன்றான். ஆனால் அந்த முயற்சியைக் கைவிட்டான், அனந்தின் கைத் துப்பாக்கி தனது இடையில் அழுந்தியிருந்ததால். பேச உதடுகளைத் திறக்க முயன்றான். அந்த முயற்சியையும் கைவிட்டான். அனந்தின் கண்கள் தன் விழிகளைக் கட்டதால். டெய்லரை எச்சரிக்க முயன்றான் தனது ஒரு காலால். அந்தக் காலை அனந்தின் கால் பலமாக மிதித்திருந்தது.

பக்கத்தில் ஏற்பட்ட அசைவால் டெய்லர் தனது மயக்கத்திலிருந்து மீண்டு "என்ன?" என்று கேட்டுத் திரும்பினான்.

அனந்தின் கண்கள் மூடிக் கிடந்தன முக்கால் வாசி. அவன் கை திடீரென வில்வரின் இடையிலிருந்து எழுந்து டெய்லரின் முகத்தை நோக்கியது. படகின் பீரங்கியைத் திருப்ப அதை நோக்கினான் டெய்லர். அது திரும்ப முடியாதபடி அனந்தின் தோள் அதில் சாய்ந்து கிடந்தது.

"எதையும் செய்ய முயலாதே டெய்லர்" என்றான் அனந்த் சற்று இரைந்த குரலில்.

"ஏன்?"

"திரும்பிப் பார்."

திரும்பிப் பார்த்தான் டெய்லர். சிந்து துர்க்கத்திலிருந்து பத்துப் பதினைந்து படகுகள் அந்தப் படகை நோக்கி வந்துகொண்டிருந்தன. நிலைமையைப் புரிந்து கொண்ட டெய்லரின் விழிகளில் பயங்கரச் சாயை படர்ந்தது.

"இதற்கென்ன அர்த்தம்?" என்று வினவினான் டெய்லர்.

"காற்று கரையை நோக்கி வீசுகிறது" என்றான் அனந்த் மெதுவாக.

"அதனால்?"

"அது ராணியின் கீதத்தைக் கவர்ந்து சென்றது. காற்றில் கலந்த கீதம் கரையை எட்டியது. ராணியின் கீதம் யாரையும் மயக்குவது. 'அதை அறியாதவர்கள் இடையாது. சிந்து துர்க்கம் அறியாதிருக்குமா?" என்று பின்னால் வந்த படகுகளைக் காட்டினான்.

டெய்லர் தான் தோற்று விட்டதை உணர்ந்து கொண்டான். ஆனால் அவன் முகத்தில் பயத்தின் அறிகுறி சிறிதும் இல்லை. "அடுத்து என்ன செய்வதாக உத்தேசம்?" என்று வினவினான் டெய்லர்.

உத்தேசத்தைச் சொன்னான் இந்திரஜித். அது டெய்லர், வில்வர் இருவரை மட்டுமல்ல, ராணியையும் பிரமிப்பில் ஆழ்த்தியது. அனந்துக்குப் பைத்தியம் இல்லை என்பதைத் தீர்மானித்துக் கொள்ள அவனை உற்று நோக்கினாள் ராணி.

(தொடரும்)

# தகாரா

பட விமர்சனம்



கன்னியரின் கடைக்கண் வீச்சு சாதிக்காதது ஏது? மலையாளப் படம் தகாராவின் கதா நாயகன் மட்டும் விதிவிலக்கா என்ன? தன் காதலி சுபாஷிணியை அடைய, அடிமைப் பட்டுக் கிடந்தவன் அடிபட்ட புலியென எப்படிச் சிலிர்த்துக் கொண்டு எழுகிறான் -- படு கோரமான ஒரு கொலையையும் செய்யுமளவுக்கு வெறியையே ஏற்படுத்துகிறதே காதல் - அந்த அப்பாவிக்கு!

கண்ணுக்கு இனிய கேரளத்துக் காட்சிகள் இளமைத் துடிப்புகள், சுகங்கள் எல்லாம் உண்டு. அசோக்குமாரின் காமிரா அழகுகளைக் கொட்டிக் குவித்திருக்கிறது. ஆனால் படம் நத்தை வேகம். இதில் ஏற்படும் சலிப்பைக் கதாநாயகி சுபாஷிணியாக வரும் சுரேகாவின் இளமைத் தோற்றத்துக்காகச் சகித்துக் கொள்பவர்கள் இருந்தால் சரி! நமக்கு ஆட்சேபணை இல்லை.

-கௌசிகன்



# நான் கண்ட ரஷ்யா

அகிலன்

புரட்சிக்கு முன்பிருந்த காலம் தொட்டே சுமார் 100, 150 ஆண்டுகளாகவே, ரஷ்ய மக்கள் தங்களுடைய எழுத்தாளர்களை மிகவும் போற்றி வந்திருக்கிறார்கள் என்பதற்கு எனக்கு அந்தப் பூங்காவில் ஒரு சான்று கிடைத்தது. பளிங்குச் சிலைகளுக்கு அப்பால் மரக் கூட்டம் நிறைந்த ஒரு பகுதியில், குழந்தை எழுத்தாளர் ஒருவரின் மார்பளவுச் சிலை இருக்கிறது. நகர மக்களே பணம் திரட்டி 1855ல் அந்தச் சிலையை அங்கே வைத்திருக்கிறார்கள். 'இவான்க்ரிலோவ்' என்ற அந்த எழுத்தாளர் குழந்தைகளுக்காக, ஆடு, மாடு, கரடி, சிங்கம், புலி, மான், சிறுத்தை முதலிய மிருகங்களையெல்லாம் பாத்திரங்களாக்கிக் கதைகள் எழுதியுள்ளார். அவருடைய மார்பளவுச் சிலையில் அவருடைய கதாபாத்திரங்களான அவ்வளவு மிருகங்களும் செடி கொடிகளும் மலர்களும் உயிர்த் துடிப்பை வெளிப்படுத்தும் முறையில் செதுக்கப்பட்டுள்ளன!

மாமன்னர் பீட்டரால் தொடங்கப் பெற்றுப் பிறகு பெரிதாக வளர்ந்துவிட்ட தொல்பொருள் காட்சி சாலை ஒன்றுக்குச் சென்றோம். மாமன்னர் பீட்டரின் பெயரையே அந்தக் காட்சிசாலைக்குச் சூட்டியுள்ளார்கள். உலகின் பல்வேறு நாடுகளிலும் உள்ள பல இன மக்களின் வாழ்க்கை முறை வளர்ச்சி பற்றிப் பல காட்சிப் பொருள்கள் அங்கு வைக்கப்பட்டுள்ளன. வெளிநாடுகளுக்கு யாத்ரிகர்களாகச் சென்ற ரஷ்யர்கள் பிற்காலத்தில் கொண்டு வந்த பொருள்களும் அங்கு இடம் பெற்றுள்ளன.

கண்காட்சி சாலையின் இந்தியப் பகுதியைப் பார்த்துக் கொண்டே வந்தேன். தமிழ் நாட்டுப் பகுதி அதற்குரிய தனித் தன்மையுடன் விளங்கியது. உருத்திராட்ச மாலை அணிந்து திருநீறு பூசிய நெற்றியுடன் ஒருவர் சிவபூசையில் அமர்ந்திருப்பது போன்று ஒரு சிற்பம் இருந்தது. நம் நாட்டுப் பாங்கில் சேலை அணிந்த ஒரு தமிழ்ப் பெண்ணும் அங்கு சிலையாகக் காட்சி தந்தாள். கோவில்களின் படிமங்கள், தேர்களின் உருவங்கள், பஞ்சலோக விக்கிரகங்கள், கிராமப்புறத் தேவதைகளுக்குக் கிராமவாசிகள் வைக்கும் மண் – குதிரைகள், யாளி வாகனம் – ரிஷப வாகனம் போன்ற கோவில் வாகனங்கள் இவ்வளவும் அங்கே காணப்பட்டன. தமிழர்களின் நாகரிகம் கோயில்களைச் சுற்றி எழும்பிய நாகரிகம்; இதை நன்கு உணர்ந்து கொண்டு பீட்டர்



ஒரு ரஷ்யச் சித்திரம்



✖ லெனின் கிராட் ''ஸ்மோல்னி''யில் உள்ள லெனின் வீட்டு அறை. மரத்தட்டிக்குப் பின்னால் சிறிய படுக்கை அறை.

✖ 'ஸ்மோல்னி'யின் முகப்பு

கண்காட்சி சாலையின் தமிழ் நாட்டுப் பிரிவை அங்கே அமைத்திருந்தார்கள். அந்தக் கண்காட்சி சாலையில் இந்தியப் பகுதி பற்றி ஆய்வு நடத்தும் பெண்மணிகள் எங்களுக்கு வரவேற்பு அளித்தனர். தொன்மையான வரலாறும் நாகரிகமும் கொண்ட மக்கள் உலகின் எந்தப் பகுதியில் வாழ்ந்தாலும் அவர்களைப் பற்றி அங்கே ஆராய்ந்து வருகிறார்கள். சிந்துவெளி நாகரிகத்தை வெளிப்படுத்தும் மொஹஞ்சதாரோவிலிருந்து எடுக்கப்பட்ட ஓர் அசல் முத்திரையும் சில நகல் முத்திரைகளும் அங்கு காணப்பட்டன.

மாமன்னர் பீட்டர் தாமே சேகரித்த சில அபூர்வமான அதிசயப் பொருள்கள் அங்கு இடம் பெற்றுள்ளன. அவர் ஒரு பல்துறை மேதையாக விளங்கியிருக்கிறார் என்பது எங்களுக்கு நன்கு புலப்பட்டது. லெனின்கிராட் நகரத்தில் பல இடங்களில் பீட்டருக்குச் சிலைகள் எழுப்பப்பட்டுள்ளன. நீவா நதிக்கு மறுபுறத்தில் அவரால் முதன் முதலில் கட்டப்பட்ட கோட்டை இருக்கிறது. அந்தக் கோட்டைக்குள் உள்ள 'செயிண்ட் பீட்டர் — பால் கதீட்ரல்' என்ற கிறிஸ்துவ ஆலயத்துக்குள்தான் அவருடைய கல்லறையும் அவருடைய மனைவியின் கல்லறையும் இருக்கின்றன. அந்த இரு கல்லறைகளின் மீது மட்டும் புத்தம் புது மலர் வளையங்கள் வைக்கப் பட்டிருந்தன. மாமன்னர் பீட்டரிடம் தங்களுக்குள்ள மரியாதையையும் அன்பையும் வெளிப்படுத்த லெனின் கிராட் மக்கள் செய்து வரும் ஏற்பாடு இது.

பீட்டரால் புனித பீட்டர் என்ற கிறிஸ்தவத் துறவியின் நினைவாக 'செயிண்ட் பீட்டர்ஸ்பர்க்' என்று முதலில் நகரத்துக்குப் பெயர் சூட்டப்பட்டது. பிறகு அது 'பெட்ரோகிராட்' என்று அழைக்கப்பட்டது. புரட்சிக்குப் பிறகுதான் நாட்டின் தலைநகரம் மீண்டும் மாஸ்கோவுக்கு மாற்றப்பட்டது. அதை அடுத்து நாட்டின் தந்தை லெனின் உயிர்நீத்த மூன்றாம் நாள் அந்த நகரத்துக்கு லெனின்கிராட் என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள்,

லெனினைப் புரட்சியாளராக உருவாக்கிய நகரம் அது; அதுவே அவருடைய அடிப்படைப் போர்க்களமாகவும் அமைந்தது; அவர் வெற்றி பெற்று உலகுக்கு ஒரு புதிய சமுதாயத்தைக் கட்டிக் காட்டியதும் அந்த நகரத்தில் தான். — இனி அடுத்து, புதிய ரஷ்யாவின் தந்தை லெனினுக்கும் அந்த நகருக்கும் உள்ள தொடர்பைக் காண்போம்.

## 8. உயிர் வாழும் லெனின்

லெனின்கிராட் நகரத்தை, புரட்சிக்கு முன்பிருந்த நிலையில் உள்ள பழைய நகரம், பிறகு எழும்பி வரும் புதிய நகரம் என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். பழைய நகரத்தைக் கூடுமான வரையில் அப்படியே வைத்துப் பாதுகாத்து வருகிறார்கள். அதில் உள்ள பழங்காலத்துப் பிரபுக்களின் மாளிகைகள் மூன்றடுக்கு மாளிகைகளாக உள்ளன. பழைய நகரம் முழுவதும் வரலாற்றுச் சிறப்பு நிறைந்த ஒரு காட்சி சாலை தான் என்றாலும், அதில் சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட காட்சி சாலைகள் திறக்கப்பட்டிருக்கின்றன. நாட்டின் வரலாறு, புரட்சியின் வரலாறு, தொல் பொருள் சேமிப்பு, தொழில் வளர்ச்சி வரலாறு, கவிஞர்கள், நாவலாசிரியர்கள், இலக்கியங்களின் வரலாறு இவற்றுக்கெல்லாம் அங்கே தனித்தனியே காட்சி சாலைகள் உள்ளன.

லெனின்கிராடில் உள்ள அறுபது கண்காட்சி சாலைகளில் பதினைந்து காட்சிசாலைகள் லெனினோடும், புரட்சி இயக்கத்தோடும் தொடர்பு கொண்டவை! அதுமட்டுமல்ல; அங்குள்ள எல்லாக் குடியரசுகளின் தலைநகர்களிலும் லெனின் காட்சி சாலைகள் இருக்கின்றன. நான் சென்ற நகரங்களில் எல்லாம் லெனின் சிலைகள், சித்திரங்கள் வாசகங்கள் முதலியவற்றைக் கண்டேன். அங்கு வாழும் பலர் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களாக இருக்கலாம். ஆனால் ரஷ்யக் குடிமக்கள் அனைவருக்கும் பொதுவான ஒரு கண்கண்ட தெய்வமாக விளங்குபவர் லெனின்.

தங்கள் தேசத் தந்தைக்கு அவர்கள் ஆண்டுக்கு ஒரு முறை விழா எடுத்து, பஜனைகள் நடத்தி, பாட்டுக்கள் பாடி, விழா முடிந்தவுடன் அவரையும், அவர்தம் கொள்கைகளையும் மறந்து விடுவதில்லை. ஒவ்வொரு ரஷ்யக் குடிமகனுக்கும் அவருடைய கருத்துக்கள் பள்ளியில், கல்லூரியில் பல்கலைக் கழகங்களில் விளக்கப்படுகின்றன. அந்தக் கருத்துக்கள் எவ்வாறு வயல் வெளிகளிலும் தொழிற்சாலைகளிலும் அரசாங்க நிறுவனங்களிலும் கலாசாரக் குழுக்களிலும் செயல்படுகின்றன என்று சுட்டிக் காட்டப்படுகின்றன. கால மாறுதல்களுக்கும் புதிய அறைகூவல்களுக்கும் ஏற்ற நெளிவு சுளிவுகளுடன்



# தேள் ஆராய்ச்சி!

கொடுக்கைப் பிடித்தே தூக்குகிறார் தேனே பெர்னார்ட் பேட்ஸ். பிரிட்டனில் வசிக்கும் இந்தத் தேள் நிபுணர் நாமெல்லாம் அஞ்சுவது போல தேள் அப்படி யொன்றும் பயங்கர ஜந்து அல்ல என்கிறார். அவர் கையில் பிடித்துப் பூதக் கண்ணாடியால் ஆராய்வது ராஜ தேள். ராஜ நாகம் என்பார்களே அப்படி இது ராஜ தேள். ஓர் அடி நீளம் வரை வளரக் கூடியது. தேள்களிலேயே பெரிய தேள் இதுதான். ஐம்பது விதமான இருநூறுக்கும் மேற்பட்ட தேள்களைச் சேகரித்திருக்கும் இவர், பல சமயங்களில் கொட்டப்பட்டிருக்கிறார். என்றாலும் விடாமல் ஆராய்ச்சி நடத்துகிறார். ஓராண்டு வரை உணவின்றி இருந்தாலும் தேள் சமாளித்துக் கொள்ளும். அதன் பின் கிடைக்கும் ஊட்ட சக்தி கொண்டு பாழாகிப் போன உடலுறுப்புக்களைப் புதுப்பித்துக் கொள்ளும் என்பது இவர் தமது ஆராய்ச்சிகளில் கண்ட முடிவுகளில் ஒன்று!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

—அடிப்படையில் மாற்றமில்லாமல்— அவை ஒவ்வொரு நாளும் சமுதாயத்தின் ஒவ்வொரு பிரிவினராலும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. கொள்கைகள் திட்டங்களாகின்றன; திட்டங்கள் குறிப்பிட்ட கால அளவில் நிறைவேற்றப்படுகின்றன. பயன் மக்களைச் சேருகிறது.

மாஸ்கோவில் உள்ள செஞ்சதுக்கத்தில் ஒரு கட்டிடத்துக்குள் கண்ணாடிப் பேழையில் லெனினின் பூத உடலை வைத்திருக்கிறார்கள். அதைக் காண்பதற்காக அங்கே நாள்தோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடுகிறார்கள். ரஷ்யாவின் பல்வேறு குடியரசுகளிலிருந்தும் வரும் மக்கள் மாணவ மாணவியர் கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்து வருவோர், மற்ற வெளி நாடுகளிலிருந்து வரும் உல்லாசப் பயணிகள் — இவ்வாறு பலதரப்பட்டவர்கள் அங்கு வந்து லெனினின் பூத உடலைத் தரிசித்துச் செல்கிறார்கள்.

கண்ணாடிப் பேழைக்குள் உள்ள லெனினின் சிவந்த முகத்தையோ அவருடைய உடலையோ கவனித்தால் 1924ம் ஆண்டு இறந்து போன ஒருவரின் தோற்றம் அவற்றில் இல்லை. இறுக மூடிய ஒரு கரத்தோடு அவர் அப்போதுதான் உறங்கச் சென்றது போல் தோன்றுகிறது. அவருக்காக மக்கள் கொண்டுவரும் மலர் வளையங்களும் செண்டுகளும் கட்டிடத்தின் முற் பகுதியிலேயே வைக்கப்படுகின்றன.

இம்முறை லெனின்கிராடில் தங்கிய நான்கு நாட்களில் ஓரிரு நாட்களை லெனின் சம்பந்தப்பட்ட இடங்களைப் பார்ப்பதிலும் புரட்சியோடு தொடர்பான கட்டிடங்களையும் காட்சிகளையும் காண்பதிலும் செலவிட்டோம். அவற்றில் முக்கியமானது நீவா நதிக் கரையின் இடதுபுறத்தை ஒட்டியுள்ள 'ஸ்மோல்னி' எனும் மிகப் பெரிய மாளிகையாகும்.

பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியில் அது கட்டப்பட்ட போது கிறிஸ்துவக் கன்னிமாடத்துக்கென்று திட்டமிடப்பட்டது. கட்டி முடிக்கப்பெற்றவுடன் பிரபுக்களின் பெண் குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடமாக அது மாற்றப்பட்டது. 1917 பிப்ரவரியில் முதல் புரட்சி முடிந்தவுடனேயே அது தொழிலாளர் புரட்சிக் குழுவின் தலைமையகமாகிவிட்டது. அக்டோபர் புரட்சிக்கு முதல் நாள் லெனின் அங்கு வந்து சேர்ந்து, புரட்சிக்கான தமது கடைசிக் கட்டளைகளை இட்டிருக்கிறார். புரட்சிக்குப் பிறகு அவர் தலைமையில் உருவான அரசாங்கமும் அதே கட்டிடத்தில்தான் இயங்கி யிருக்கிறது.

ஆயிரம் பேர்களுக்கு மேல் கூடக் கூடிய ஓர் அரங்கம் போன்ற மண்டபமும், நீட்டுப் போக்கில் வரிசை வரிசையாக அறைகளும் கொண்ட பழங்காலத்து மாளிகை அது. அந்த மண்டபத்திலிருந்து கொண்டுதான் அவர் புரட்சியாளர்களுக்கு உரையாற்றியிருக்கிறார். கட்டளைகள் இட்டிருக்கிறார்.

அடுத்தாற்போல் புரட்சியையும் ஆட்சியையும் ஒன்றாக நடத்திக் கொண்டிருந்த அவருடைய அலுவலகத்தைக் காண வந்தோம். அதே மாளிகையின் ஒரு மூலையிலிருந்த சிறிய அறை ஒன்று தான் அவர் அலுவலகம். அது மூன்றாகத் தடுக்கப்பட்டிருந்தது. அறையின் முன்புறம் துப்பாக்கிகளுடன் இரு காவலர்கள் அக்காலத்தில் நின்றிருக்கிறார்கள். உள்ளே நுழைந்தவுடன் ஒரு மேசையின் மேல் ஒரு பழைய 'டைப் ரைட்டர்' காட்சி தருகிறது. அவருடைய செயலாளர் அங்கிருந்து பணியாற்றியிருக்க வேண்டும். (தொடரும்)

# மிகப் பொருத்தமான ஜோடி

## இந்தியாவின் ஒரே துர்நாற்றமகற்றும் சோப் மற்றும் டால்க்

துர்நாற்றத்திலிருந்து உங்கள் உடலுக்கு
இரட்டை பாதுகாப்பு. சிந்தால் சோப் குளியலும்
பின் சிந்தால் பவுடர் தூவலும்—ஆகா!
புத்துணர்ச்சியின் புதுச் சிகரத்தில்
நீங்கள் இருப்பீர்கள்!







**கோத்ரெஜ் வழங்கும் சிந்தால்**

Interpub/CTS/1/79 TM

# ஒரு தவம் – ஒரு பழி – இரண்டு சாட்சிகள்



**– வ.சா.நாகராஜன் –**

கல்யாணம் ஆகி, சென்னைக்கு வந்து குடித்தனம் நடத்த ஆரம்பித்த ஐந்தாறு மாதங்களுக்குப்பிறகுதான்அவளுக்குத் தெரிந்தது. அவன் அப்படிப்பட்டவன் என்று. கல்யாணத்தன்று இரவே அவன் ஒரு மாதிரி வெறி பிடித்தவன் என்று புரிந்திருந்தது. இருந்துவிட்டுப் போகட்டும் என்று விட்டு விட்டாள். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அவன் மனப் போக்கு அவளுக்குப் புரிந்தது.

வீடு கூட்டுபவள் மாறிப் போய்ப் புதிதாக ஒருத்தி வேலைக்கு வந்து சேர்ந்தாள். அவள் பின்கட்டில் பாத்திரங்களைத் தேய்க்கும்போது அவன் ஷேவிங் செட்டை எடுத்துக்கொண்டு வெளிச்சமாய் இருக்கிறதென்று அந்தப் பக்கம் போக ஆரம்பித்தான். அரை மணி நேரத்துக்கு மேல் ஷேவ் செய்யச் செலவழித்தான். இருபது தடவை அவன் பார்வை கிணற்றடியில் பற்றுத் தேய்ப்பவள் மீது மேய்வதை அவள் சமையல் அறையிலிருந்தபடியே கவனித்தாள். இது என்ன கௌரவம் இல்லாத அசட்டுப் பார்வை என்று அவளுக்கு எரிச்சலாக இருந்தது.

ஒரு நாள் இரண்டு பேரும் சினிமாவுக்குக் கிளம்பினார்கள். மாலை வேளை. தெருவைப் பெருக்குபவள் தெருவோரத்தில் தொரட்டியை முட்டுக் கொடுத்துக் கொண்டு ஒற்றைக் காலில் நின்றபடியே சுருக்குப் பையைத் திறந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தாள். அவளை அவர்கள் தாண்டும்போது அவள் புகையிலை போட்டுக் கொள்ள ஒரு கையைத் தூக்கி வாய்க்கருகில் கொண்டு போய் அந்த நிலையில் நின்றாள். அவன் அவள் மீது வைத்த கண்ணை எடுக்கவில்லை. தூரத்தில் அவள் கண்ணில் பட ஆரம்பித்ததிலிருந்து அவளைத் தாண்டும்வரை அவளையே பார்த்துக் கொண்டிருந்தவன், அவளைத் தாண்டிய பிறகும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தான். ''அப்பா! என்ன உடம்பு, வின் என்று! தினம் இப்படித் தெருவில் நாலைந்து மைல் நடந்தால் உடம்பு இப்படியாகிவிடும் போலிருக்கிறது!'' என்று யாரிடமோ சொல்வது போல் அவள் காது கேட்கவே அவன் சொன்னதைக் கேட்டாள். அவளுக்குக் கூச்சமாக இருந்தது. உடம்பு முழுவதும் புழுதி அழுக்கோடு தெருப் பெருக்குகிற தொழிலாளி அவள். இவன் ருசி என்ன, மனம் என்ன மாதிரி என்ற நினைவில் அவளுக்கு உடல் முழுதும் எரிந்தது.

நாள்பட நாள்பட அவளுக்குத் தெரிந்தது அவனுக்கு வெளியில் இந்த மாதிரி சில இடங்களில் உறவு உண்டு என்று. இந்த விஷயத்தில் அவன் ஜாதி வித்தியாசம் எல்லாம் பாராட்டாதவன் என்று. முக்கியமாக அவனுடைய ருசி, மேல் மட்டத்து மனிதர்களை விடக் கீழ் மட்டத்தில் உள்ளவர்களிடம் அதிகமாக இருக்கிறது என்று. தெரிந்தும் அவனிடம் என்னவென்று கேட்பது, எப்படி விவாதம் செய்வது என்றெல்லாம் அவளுக்குப் புரியவில்லை. கிராமத்திலிருந்து வந்தவள் அவள்.

இப்படி இருக்கும்போது அவள் உண்டானாள்.

மூன்றும் மாதம் அம்மாவின் ஊருக்குப் போனாள். ஒரு மாதம் இருந்துவிட்டுத் திரும்பினாள். திரும்புவதற்கு முன்னால் அவனுக்கு எழுத முடியவில்லை. திடீரென்று கிளம்பினாள். நல்ல துணை கிடைத்தது. நாளும் நன்றாக இருந்தது. உடனே கிளம்பி விட்டாள். பகல் வண்டி. பிற்பகல் நாலு மணிக்குத் தாம்பரம் வந்து விட்டது. காம்பவுண்ட் கேட்டைத் திறந்து கொண்டு வாசல் படியருகில் வந்து நின்றாள். வராந்தாவை ஒட்டி இடதுபுறம் அவர்களது படுக்கை அறை. நேர் எதிரே ஒரு சின்ன ஹால். அதை ஒட்டிச் சமையல்கட்டு.

வராந்தா கேட் உள் பக்கம் தாளிடப் பட்டிருந்தது. மெதுவாகச் சப்தப்படுத்தினாள்.

அவன் படுக்கையறையிலிருந்து வந்தான். எதிர்பாராமல் அவளைப் பார்த்ததும் திடுக்கிட்டான். உள்பக்கம் பார்த்தான். வேலைக்காரி உள்ளேயிருந்து எட்டிப் பார்த்தாள். இவளைப் பார்த்ததும் பயமும் பதற்றமும் சேர்ந்து அவள் பின்பக்கம் ஓடினாள்.

அவன் கேட்டைத் திறந்தான். அவள் வராந்தாவில் காலடி எடுத்து வைத்துப் படுக்கை அறையைப் பார்த்தாள். மெத்தை பிரித்தபடி இருந்தது.

அவளுக்கு அழுது, சத்தம் போட்டு, களேபரம் செய்து பழக்கமும் இல்லை. அதற்கான தைரியமும் இல்லை. வாய் அடைத்துக்

கொண்டு விட்டது. உள்ளுக்குள் குமுறலும் ஆத்திரமும் எரிச்சலும் அருவெறுப்பும் புகைந்து புகைந்து எழுந்தன. அவற்றை வெளியிடும் வகை தெரியவில்லை. பேசாமல் சமையல் கட்டுக்குப் போனான். காப்பி போட ஆரம்பித்தான்.

பெரியதாக ரகளை நடக்கப் போகிறது என்று எதிர்பார்த்தவனுக்கு ஒன்றும் நடக்கவில்லை என்றதும் அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. சட்டையை மாட்டிக் கொண்டு, வெளியே போகக் கிளம்பினான்.

அவளுக்கு மாதம் ஆகிவிட்டது. ஊருக்குக் கிளம்பினாள். மனசுக்குள் குழப்பமாகவே இருந்தது. 'நான் இங்கே இருக்கும்போதே வேலைக்காரியையும் தெருப் பெருக்குகிறவளையும் பார்த்துக் கொண்டு நிற்பவர், தான் ஊருக்குப் போய்விட்டால் எப்படி இருப்பார்' என்று யோசித்தாள். அவளுக்கு வாய் திறந்து ஏதும் சொல்ல முடியவில்லை.

அவள் அம்மா இருந்த ஊருக்கு வந்தாள். அப்பா இல்லை. அது சின்ன ஊர். டவுன் இல்லை. அங்கே ஆரம்ப சுகாதார நிலையம் என்ற பெயரில் பிரசவ ஆஸ்பத்திரி சின்னக் கட்டிடத்தில் இருந்தது. குளக்கரையில் ஆரம்பப் பள்ளிக்கூடத்துக்கு அடுத்த கட்டிடம். இரண்டே இரண்டு படுக்கை. அநேகமாக எப்போதும் அவை காலியாகவே இருக்கும். அங்கே வருஷக் கணக்காகப் பிரசவம் பார்க்கும் மிட் ஒய்ஃப் ஒருத்தி இருந்தாள். அவள் அம்மாவுக்கு நெருங்கிய சிநேகிதி.



அவள் பிரசவத்துக்காக அம்மாவின் வீட்டுக்கு வந்து சேர்ந்த சில நாட்களில் மனம் அவன் செய்து வந்த காரியங்களை எண்ணிக் கரையக் கரைய, அவர்களிடம் கொஞ்சம் கொஞ்சமாகக் கணவனைப் பற்றி வருத்தத்துடன் சொன்னாள்.

"இது என்னடி கூத்து! இத்தனை நாட்கள் நீ இதைப் பத்தி வாயைத் திறக்கல்லியேடி!" என்றாள் அம்மா.

"சொல்லி என்ன பண்ணுகிறது?" என்றாள் அவள்.

"சே...! என்ன மனுஷன்... ஆம்பிளைங்களே இப்படித்தான்!" என்றாள் மிட் ஒய்ஃப்.

**மா**தம் ஆனதும் அவளுக்கு வலி எடுத்தது. அம்மா அவளை ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தாள். டாக்டர் இல்லை. மிட் ஒய்ஃபும் ஆஸ்பத்திரியைக் கூட்டிப் பெருக்கும் ஒருத்தியும்தான்.

எதிரே இருந்த கட்டிலில் ஒருத்தி வலி விளைவு வயிற்றைப் பிடித்துக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் யாரும் இல்லை.

"யாரு இது?" என்று மிட் ஒய்ஃபிடம் கேட்டாள், வலியின் நடுவில் பல்லைக் கடித்துக் கொண்டே.

"அதை ஏன் கேட்கிறே! பக்கத்துக் கிராமம். வயலிலே வேலை செய்யறவ. கல்யாணம் ஆவறதுக்கு முன்னாடியே ஆம்பிளை வேண்டியிருந்தது. வயத்திலே வாங்கிக்கிட்டா. இப்ப இங்கே கொணந்து போட்டு விட்டுச் சொல்லிக்காமப் போயிட்டாங்க கூட வந்தவங்க...."

சாயங்காலத்திலும் முன் இரவிலும் அம்மா அவளைப் பிடித்துத் தடவிக் கொடுத்துக் கொண்டே இருந்தாள். மிட் ஒய்ஃப் சிறிது நேரம் அவள் அருகிலும் சிறிது நேரம் எதிர்ப் படுக்கை அருகிலுமாக மாறி மாறி நின்று கவனித்துக் கொண்டாள். இரவு நீண்ட போது அங்கே வேறு கூட்டம் ஒன்றுமில்லை.

வலிக்கிடையில் பல்லைக் கடித்துக் கொண்டு அவள் சொன்னாள்: "அம்மா, எனக்கு ஒரு யோசனை தோணுது. அதன்படி செய்வியா?"

"என்னம்மா சொல்லு" என்று அம்மா தடவிக் கொடுத்தாள்.

"மிட் ஒய்ஃபையும் கூப்பிடு."

அவள் வந்தாள்.

"எனக்கு என்னமோ அப்பலேருந்து மனசுக்குள்ளே தோணிண்டே இருக்கு. எனக்குப் பிறக்கிற குழந்தை செத்துத்தான் பிறக்கும்னு...."

"என்னடி பேச்சு இது? பேசாம இரு."

"குறுக்கே பேசாம நான் சொல்றதைக் கேளு. நீங்களும் கேளுங்க. ஒருவேளை நான் நினைக்கிறபடியே குழந்தை செத்துப் பிறந்துதுன்னு வைச்சுக்க. இதோ இவளுக்கும் ஒரு குழந்தை பிறக்கும் இல்லையா? அது இவளுக்குத் தேவை இருக்காது. அதை எனக்குப் பிறந்ததுன்னு சொல்லி எடுத்துக் கொண்டு போய் அவர்கிட்டக் கொடுக்கப் போறேன். தனக்குச் சம்பந்தம் இல்லாத யார் யாரையோ கொஞ்சியே பழக்கம் வைத்துக் கொண்டிருக்கிற அவர் ஊர் பேர் தெரியாத யாருக்கோ பிறந்த குழந்தையைக் கொஞ்சட்டும்..."

மகளுக்கு ஜன்னி பிறந்து விட்டது என்று அம்மா பயந்தாள். ஆனால் அவள் தெளிவாக இருந்தாள். மீண்டும் அதை இன்னொரு தடவை விவரமாகச் சொன்னாள். பாதி ராத்திரிக்கு மேல் அவளுக்குக் குழந்தை பிறந்ததும் அவள் வாக்குப் பலித்தது. குழந்தை செத்தே பிறந்தது. எதிர்ப் படுக்கைக்காரிக்குப் பிறந்த குழந்தை குவா குவா என்று சத்தம் போட்டது. அந்தப் பெண் மூர்ச்சையில் இருந்தாள்.

"அவருக்குச் சரியான தண்டனை இது தான். குழந்தையை மாத்துங்க" என்றாள் அவள் மறுபடியும்.

அவனைப் பழிவாங்க வேண்டும் என்று அவர்களுக்கும் ஒரு வெறி இருந்தது. அதற்கு இது ஒரு வழியாகவே தோன்றியது.

**ஐ**ந்தாறு மாதம் கழித்து அவள் குழந்தையுடன் சென்னைக்குக் கிளம்பினாள். பெண் குழந்தையாகப் பிறந்ததில் அவனுக்குச் சந்தோஷம். பெண் குழந்தைதான் வேண்டுமென்று அவன் கடவுளை வேண்டிக்கொண்டிருந்தானாம். சொன்னான். அவன் மாதிரியும் இல்லாமல், அவள் மாதிரியும் இல்லாமல், கறுப்பாக, அம்மிக் குழவி மாதிரி இருந்தது குழந்தை. அதைக் கையில் வாங்கிக்கொண்டு உச்சியில் முத்தம் கொடுத்தான் அவன்.

அந்த நிமிஷத்திலிருந்து குழந்தையிடம் அவன் ஆசையைக் கொட்ட ஆரம்பித்தான்.

"நீ ஏன் இதற்குப் பால் கொடுக்க மாட்டேன் என்கிறாய்? எப்பப் பார்த்தாலும் புட்டிப் பாலே கொடுத்துக் கொண்டிருந்தால் குழந்தை இளைச்சுப் போயிடும்" என்றான் ஒரு நாள்.

"இது இளைக்காது. இதன் அப்பா ரொம்ப ஸ்ட்ராங். பல வயல்களிலே வேலை செஞ்சு செஞ்சு உடம்பிலே உரம் ஏறினவருக்குப் பிறந்த குழந்தை இது" என்றாள்.

அவள் தரக் குறைவாக உள் அர்த்தம் வைத்துப் பேசுவதாக அவன் நினைத்தான். அவள் சொன்னதைத் தனக்குக் கொடுத்த காம்ப்ளிமெண்டாக எடுத்துக் கொண்டான்.

அவள் அவன் மீது தனக்கு இருந்த பழியைத் தீர்த்துக் கொண்ட திருப்தியைத் தினம் தினம் அனுபவித்தாள். அந்தத் திருப்தி மூன்று வருஷங்களில் முழுமையாக ஆனதாக அவளுக்குத் தோன்றியது. இனியும் ரகசியத்தை வைத்துக் கொண்டிருக்க வேண்

"காலம், தலை கீழா மாறிப்போச்சு சார்!"
"அதெப்படிச் சொல்றீங்க?"
"ராக்கெட் வெடி தரையில் சுத்துது; தரைச் சக்கரம் மேலே பறக்குது!" — வ. தேனப்பன்



தலைமுறை பல வென்றது
தரத்தினில்
உயர்ந்தது
கலைவண்ணம்
சிறந்த பொன் ஆடை
சரிகை கலந்தொளிர்
கதர் பட்டுச் சேலை

சிறப்புத் தள்ளுபடி

கதர்ப் பருத்தி கதர்பட்டு

**25% 10%**

கிடைக்குமிடம் : தமிழ்நாடு எல்லா
கதர் கிராமத் தொழில் வாரிய அங்காடிகள்
30-9-79 முதல் 18-10-79 வரை



தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்

சென்னை-600 001



டியதில்லே. ஒரு நாள் விஷயத்தை நடுக் கூடத்தில் பொத்தென்று பூசணிக்காயைப் போட்டு உடைப்பது மாதிரி உடைத்துவிட வேண்டியதுதான் என்று நினைத்தாள்.

ஒரு நாள். குழந்தையிடம் ஒரு வெறியோடு அவன் திருப்பித் திருப்பி முத்தம் கொடுத்துக் கொண்டு கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தான்.

ஒரு முன்னறிவிப்பும் இன்றித் திடுதிப்பென்று அவள் ''நீங்கள் ஏன் இப்போதெல்லாம் முன்னே மாதிரி வேலைக்காரியை எல்லாம் பார்க்கிறதில்லே?..'' என்று கேட்டாள்.

அவள் இந்த வீட்டுக்கு வந்த இந்த நான்கு வருஷங்களில் இப்போதுதான் முதன் முதலாக அந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டது அவனுக்கு விசித்திரமாக இருந்தது.

''என்ன கேட்கிறே?'' என்றான். பிறகு ''ச்சீ.... அதெல்லாம் விட்டாச்சு இப்ப எப்படி இருக்கேன்? கொஞ்சம் மாறிப் போயிட்டேன் இல்லே? எல்லாம் இந்தக் கண்ணு, செல்லம், பட்டாலேதான்!'' என்றான்.

''அதுதான் எப்படின்னு கேட்கிறேன்.''

''இது வந்ததிலிருந்து என் மனம் கூட ஒரு மாதிரியாயிட்டுது.''

''எப்படி ஆயிட்டுது?''

''இதுதான் என் உசிருன்னு. மத்தநெல்லாம் இரண்டாவது பட்சம்தான்!''

''இப்ப இவள் அம்மா வந்து இவளைக் கொடுங்கன்னு கேட்டாள்...?''

''இந்தா பிடி, வாங்கிக்கயேன். நீதான் அதிகமாக இதைத் தூக்க மாட்டேன் என்கிறே....''

''நான் இல்லே. 'இவ அம்மா' வந்து இவளைக் கேட்டா...? இதன் நிஜ அம்மாவைப் பார்க்க வேண்டாமா நீங்க? ரொம்ப நல்லா இருப்பா அவ, என்னைவிட..''

''என்ன சொல்றே திருப்பித் திருப்பி?''

''சொல்றேன். குழந்தைப் பேற்றுக்கு ஊருக்குப் போனேனில்லையா? எனக்குக் குழந்தை செத்துப் பிறந்தது...''

''சரசா...?''

''நிஜம்தான். இதன் அம்மா எதிர்ப் படுக்கையிலே இருந்தா. அழுதுகொண்டிருந்தா. ஏண்டி அழுறே, ரொம்ப வலிக்கிறதா என்று கேட்டேன். வலிக்காக அழலேன்னு. பின்னே என்னன்னேன். இதை என் வயித்திலே கொடுத்துட்டு அந்த மனுஷன் பாட்டுக்குப் போயிட்டாம்மா என்றாள். யாருடி அவன்னு கேட்டேன். என்னோட வயல்லே வேலே செய்யிறவன். ஒரு நாவெய்யல்லே வெட்ட வெளிக் கருக மரத்தடி நிழல்லே.... அது குழந்தையா என் வயித்திலே வந்து விடிஞ்சதுன்னு அழுதா....''

''சரசா....''

''இது அவளுக்குப் பிறந்தது. எனக்குப் பிறந்தது செத்துப் போயிடுத்து. நீங்கதானே அந்த மாதிரி ஜனங்களைப் பார்த்து ஆசைப் படுவீங்க? வேலே செய்கிறவ, ரோடு பெருக்கிறவன்னு...? அதனாலேதான் வயல்லே வேலே செய்யறவ குழந்தைதான் உங்களுக்குப் பிடிக்கும்னு கொண்டு வந்தேன். அன்னைக்குச் சினிமாவுக்குப் போறப்ப சொன்னீங்களே, 'ரோடு பெருக்கிற அவனுக்கு வின்ணுன்னு எப்படிப்பட்ட உடம்பு'ன்னு. இதோ இதன் உடம்பைத்தான் பாருங்களேன். இந்தச் சின்ன வயசிலேயே அதே மாதிரி விண்ணுன்னு இருக்கு. இல்லே...?''

கையிலிருந்த குழந்தையைக் கீழே போட்டு விட்டுக் கையை உதறினான் அவன்.

''அடி பாவி. நீ சொல்றது அத்தனையும் நிஜமா? இந்தக் குழந்தை உன்னுடையது இல்லே, இது எனக்குப் பிறந்தது இல்லேங்கிறது உண்மையாகவே நிஜமா? பொய் சொல்லி என் வயித்தெரிச்சலைக் கிளப்பாதே. புழுவாய்ப் பிறப்பே.''

''இந்தக் குழந்தை என் வயிற்றிலே பிறந்ததில்லே. உங்களுக்குப் பிறந்ததும் இல்லே. இன்னமும் நீங்க நம்ப மாட்டீங்கன்னுதான் பெத்தவளையே நேரே இன்னிக்கு வரச் சொல்லி இருக்கேன். அதுக்கும் சாட்சி வேணுமில்லையா? அதற்கு, அப்போது கூட இருந்த என் அம்மாவையும் பிரசவம் பார்த்த மிட் ஒய்ஃபையும் சேர்த்து வரச் சொல்லியிருக்கேன்...''

''அடி பாவி.... பாவி...! இத்தனையையும் இந்த மூணு வருஷம் எப்படி மனசிலே வைச்சுப் புதைச்சுண்டிருந்தே...?''

''எல்லாம் நீங்க உங்க செயல்களாலே கொடுத்த தைரியம்தான்.''

''கொலேகாரி! எவனோ போகிற போக்கிலே வயல் வெளியிலே செய்த பாவத்தை என் தலையிலே கட்டி மூணு வருஷம் என்னைக் கொஞ்சும்படி வைச்சுட்டியே...''

''போகிற போக்கிலேயும், இங்கேயே இருக்கிற இருப்பிலேயும் நீங்க செய்த பாவம் எத்தனைன்னு நினைச்சுப் பார்க்கவேண்டாமா? உடம்பு முழுவதும் புழுதியோடிய அழுக்கோடு தெருக் கோடியிலே நிற்கிற தோட்டிச்சியை விட இந்தக் குழந்தை நன்னாத்தானே இருக்கு, விண்ணுனு?''

''உனக்கு இவ்வளவு அழுத்தம் உண்டுன்னு தெரியாமப் போயிடுத்தே?...''

''பெண்களுக்கு அழுத்தம் உடம்போடு பிறக்கிறதில்லே. உங்க நடத்தையினாலே அதை வலுக்கட்டாயமாக எனக்கு வரும்படி பண்ணினீங்க...''

இத்தனை நாளும் இருந்த ஆசையெல்லாம் போய், அருவருப்போடு அந்தக் கறுப்புக் குழந்தையை வெறுப்புடன் பார்த்தான்.

வாசலில் வந்து நின்ற சைக்கிள் ரிக்‌ஷாவிலிருந்து அவள் சொன்னதையெல்லாம் நிரூபிக்க ஒரு பெண்ணும், சாட்சி சொல்ல இரண்டு பேரும் இறங்கி உள் பக்கமாக வந்து கொண்டிருந்தார்கள்.



மருமகன்: ஏன் மாமா நீங்கள் பழமொழிகள் சேகரிக்கிறீங்களாமே! நான் கேள்விப் படாததா ஒண்ணு சொல்லுங்க, பார்ப்போம்.

மாமனார்: விருந்தும் மருந்தும் மூன்று நாள் மட்டும்.

— ஆர். கோபால கிருஷ்ணன்



[கஜபதி ஜவுளிக் கடைக்குள் ஒரு கணவனும் மனைவியும் நுழைகிறார்கள்.]

கஜபதி: வாங்க... வாங்க என்ன ஜவுளி பார்க்கிறீங்க? புதுசா சாடின் பிரிண்ட் புடவை வந்திருக்கிறது... ஃபோரடோ ஃபினிஷ் சாரீஸ் இருக்கு... ஐயாவுக்கு ஷர்ட், பாண்ட் பீஸ் இருக்குது. டெரிகாட் பாலியஸ்டர், காட்டன்...

கணவன்: ரெடிமேட் ஷர்ட் பார்க்கலாம்னு வந்தேன்.

கஜபதி: தாராளமாக. சிங்கிள் பாக்கெட், டபுள் பாக்கெட், அரைக் கை, முழுக்கை, நீளக் காலர், ரவுண்ட் காலர், எல்லா மாடலும் இருக்குது. கலர், வெள்ளை, பிரிண்டட், ஸ்பன், எப்படி வேண்டுமானாலும் இருக்குது. டேய், பையா ரெடிமேட் ஷர்ட் எடு.

பையன்: இந்தாங்க இருபது ஷர்ட்.

கஜபதி: இன்னும் இருபது, முப்பது எடுடா. பாருங்க, சார்.

கணவன்: இது பாலியஸ்டரா, டெரி காட்டனா?

கஜபதி: டெரிகாட்டன். பாலியஸ்டரில் இதே பேட்டர்ன் இருக்குது.

மனைவி: சின்னச் சின்னப் பூப்போட்டது வேணும்.

கஜபதி: பையா, பூ ஷர்ட் இருபது எடு.

கணவன்: இந்தக் கலரில் எடுங்க.

கஜபதி: லைட் மஞ்சள்தானே... சைஸ் முப்பத்தி நாலுலே இருக்கும். முப்பத்தி ரெண்டு ஸ்டாக் இல்லே.

மனைவி: இவர் முப்பத்திரெண்டுதான் சைஸ்.

கஜபதி: டேய், பையா! நம்ப கோடவுனுக்குப் போய் பாலியஸ்டர் 32 சைஸில் ஷர்ட் பத்து இருபது எடுத்து வா.... உட்காருங்க ஸார். இதோ வருவான். ஜில்லுனு ஜலம் சாப்பிடறீங்களா?... முருகேசா, இவங்களுக்கு ஐஸ் வாட்டர் கொடு. ஃபானை வேகமாகப் போடு.... ஷர்ட் வர்ற வரைக்கும் அம்மா ஏதாவது பார்க்கணுமா?

மனைவி: நான் எதுவும் வாங்க வரவில்லே. இவருக்குத்தான் ஷர்ட் வேண்டும்.

கஜபதி: வாங்காவிட்டால் என்ன அம்மா. என்னென்ன ரகம் இருக்குதுன்னு பாருங்க. எப்போ தேவையோ அப்போ வந்து வாங்கிக்குங்க. பழனி... புடவைங்களை எடுத்துப் போடு. பாருங்கம்மா. டேய் இன்னும் எடுத்துப் போடேண்டா. நல்லா பிரிச்சுப் போடு. டிசைனைப் பார்க்கட்டும். இதோ வந்துடுத்துங்க ஷர்ட். பாருங்க சார்... நீங்க கேட்ட கலர், பூ எல்லாம் இருக்குது.

கணவன்: கடைக்காரரே எதுவும் எனக்குப் பிடிக்கலேங்க... நாங்க வர்றோம். உங்களுக்கு வீண் தொந்தரவு கொடுத்தோம்.

கஜபதி: இதென்னங்க தொந்தரவு. இதுக்குத்தானே கடையைத் தொறந்து வச்சிருக்கோம். இந்தத் தபா வாங்காவிட்டால் இன்னொரு தபா வாங்கறீங்க. உங்களுக்குப் பிடிச்ச சரக்கு இருந்தால் வாங்காமப் போவீங்களா... வணக்கங்க.

[கணவன் — மனைவி போகிறார்கள்.]

# இரண்டு ஜவுளிக் கடைகள்

அகஸ்தியன்

2

[அரசாங்க ஜவுளிக் கடை விற்பனை நிலையம் ஒன்றில் ஒரு கணவனும் மனைவியும் நுழைகிறார்கள்.]

மனைவி: என்னங்க இன்னிக்குக் கடை. சேல்ஸ் இல்லையோ என்னவோ.



ஸ்டாக் எடுக்கிறதுக்காகக் கடை திறந்திருக்காங்கன்னு நினைக்கிறேன்.

**கணவன்:** இன்றைய தேதியிலே போய் என்ன ஸ்டாக்? சேல்ஸ்மேன் எல்லோரும் சும்மா தானே உட்கார்ந்திருக்காங்க!

**மனைவி:** எதுக்கும் வெளியே போய்ப் பார்த்து விட்டு வாங்க. ஏதாவது அறிவிப்பு எழுதி ருக்கான்னு. இடைவேளையோ என்னவோ?

**கணவன்:** காலை பத்தரை மணிக்கே லஞ்ச் வேளையா?

**மனைவி:** அங்கே நாலைந்து பேர் டீ குடிச்சுக் கிட்டு இருக்காங்களே, அதனாலே கேட்டேன்.

**கணவன்:** வேறே ஷாப்புக்குப் போவோமா? ஷர்ட் எல்லாக் கடைகளிலும்தான் கிடைக்கும்.

**மனைவி:** ஏங்க நாலு சட்டையைக் காட்டுங்க.

**சேல்ஸ்:** ஐயா, பூப்போட்ட சட்டை கேட்கறாரு. கலரில் வேணுமாம். எங்க கிட்டே வெள்ளை ஷர்ட்டுதான் இருக்குது.

**மனைவி:** பாலியெஸ்டரில் இருக்குமா?

**சேல்ஸ்:** இருக்கும். 80-20ஆ? 67-33ஆ?

**கணவன்:** இரண்டு டைப்லேயும் காட்டுங்க.

**சேல்ஸ்:** இன்னாங்க இது? 80-20 அந்தக் கோடியில் வெச்சிருக்கோம். 67-33 இந்த மூலையிலே. அந்தப் பக்கம் போய்ப் பார்த்துட்டு வாங்க.... டேய் கிஷ்டா, இவங்களுக்கு ஷர்ட் காட்டு.

**கிருஷ்ணன்:** நீதான் காட்டேன். பெரிய சூப்ரவைஸர் மாதிரியில்லே ஆர்டர் பண்றாரு! மானேஜரைக் காக்காய் பிடிச்சுட்டா பெரிய ஆளாயிடுவியா நீ... போ போ... சரோஜா தேவி நாவல் படிச்சுக்கிட்டிருக்கிறேன்.

**சேல்ஸ்:** சரி வாங்க ஸார். நானே காட்டறேன். பூப் போட்ட சட்டை இரண்டு தான் இருக்குது. அரைக் கை சட்டை. வாங்கிக்கங்களேன்!

**மனைவி:** அ... எடுங்க... ஒரு மாறுதலுக்கு அரைக் கைச் சட்டையை வாங்கிக்கிறேன்.

**சேல்ஸ்:** சைஸ் என்னங்க?

**கணவன்:** 32.

**சேல்ஸ்:** நம்ப கையிலே 32 சைஸே இல்லிங்க.

**கணவன்:** 34?

**சேல்ஸ்:** 26 இருக்குது. 40 இருக்குது. அவ்வளவு தான்.

**மனைவி:** நம்ப பையன் சைஸ் 26தானே. அவனுக்குத்தான் ஒரு சட்டை வாங்குங்களேன்.

**சேல்ஸ்:** அம்மா 26 சைஸ் சட்டைங்க கோடவுன்லே இருக்கு.

**மனைவி:** கொண்டு வரச் சொல்லுங்க.

**சேல்ஸ்:** கொண்டுவரச் சொல்றேன். நேற்று கூட யாரோ கேட்டாங்க. 26 சைஸ் இல்லேன்னு கோடவுன் கீப்பர் சொன்ன மாதிரி ஞாபகம். நடேசா கோடவுனுக்குப் போய்....



**பாலு:** என் அம்மாவும் பெண்டாட்டியும் இப்போதெல்லாம் ஒருத்தரை யொருத்தர் 'கம்ப்ளெய்ண்ட்' பண்ணி என்னிடம் பேசறது இல்லே!

**சோமு:** அதிசயமா இருக்கே, என்னடா செய்தே?

**பாலு:** டேப் ரிக்கார்டர் வாங்கிக் கொடுத்துட்டேன். நான் ஆபிஸிலே இருக்கும்போது அவங்கவங்க 'கம்ப்ளெய்ண்டு'களைப் பதிவு செய்துப்பாங்க. நான் விரும்பும்போது போட்டுக் கேட்டுப்பேன்! ஆபிஸிலேயிருந்து வந்ததும் கழுத்தறுப்பு இருக்காது!

-ஸ்ரீ நடராஜன்



# மங்கள வாத்தியம்

ஆட்டுக் குடுமியும் காதில் கடுக்கனும் தெருவாய்ப் பேச்சும் அரைக் கிறுக்குமாக ஒரு பாத்திரத்தை உருவாக்கியிருந்தாலும் இன்னொரு கல்யாணராமனாகி விட முடியாது கமலஹாஸன் என்பதை 'சிரிகம பதநி பிலிம்ஸாரின் மங்கள வாத்தியம் நிரூபித்து விட்டது. ஆனால் காமெடி நடிகை காந்திமதியைக் கதாநாயகியாக்கி ஒரு கலர்ப் படத்தை எடுத்திருக்கும் துணிச்சலுக்காகப் பாராட்டலாம். பெண் 'ஷைலக்காக வருகிறார் காந்திமதி. வட்டிக்கு வட்டி வாங்கி ஊராரின் வயிற்றெரிச்சலையும் குவித்துக் கொள்ளும் இவருக்குத் தங்கமான இதயத்துடன் ஒரு பிள்ளை, தெருவாய்க் கமலஹாஸன். ஆனால் கராத்தே கன்னி ஸ்ரீபிரியாவை மனைவியாக அடைந்த பிறகு கமலஹாஸனின் இந்தத் தெருவாய் ஒரே குத்தில் அவுட்டாகி விடுகிறது. அத்துடன் ரசிக்கத்தக்க கட்டங்களும் வாபஸாகி விடுகின்றன. காந்திமதியின் சவால் ஸ்ரீபிரியாவின் எதிர்ச் சவால். இது தான் முக்கால்வாசிக் கதை. கமலஹாஸன் பின்னுக்குத் தள்ளப்படுகிறார் பாதிக்கு மேலே.

ரசிகர்கள் தங்கள் தரத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டு ரசிக்க ஆரம்பித்தால் மனம் விட்டுச் சிரித்து மகிழ நிறையச் சந்தர்ப்பங்கள் உண்டு. கதையை இழுத்துக்கொண்டு போக ஸ்ரீகாந்தும் வி. கே. ராமசாமியும் நம்பியாரும் ஒய். ஜி. மகேந்திரனும் நாகேஷ்-ம் பாடுபட்டிருக்கிறார்கள். கலைமணியின் கதையையும் வசனத்தையும் வைத்துக் கொண்டு இயக்குனர் கே. சங்கர் இந்த மங்கள வாத்தியம் ஒலிக்கப் பாடுபட்டிருக்கிறார். ஆ னா ல் நெஞ்சை நிறைக்கவில்லையே?

- கௌசிகன்

நடேசன்: இன்னிக்கு இன்னாப்பா உனக்கு வந்திருக்க... ரொம்ப அதிகாரம் தான் பறக்குதே. இன்னிக்குக் கோடவுன் போய் வருகிற டியூட்டி உன்னுடையது.

சேல்ஸ்: கேட்டியா கதையை. போன புதன் கிழமைக்கு அப்புறம் நீ ஒரு நாள் கூட கோடவுன் போய் வரவில்லையே.

நடேசன்: பிடிச்சாருடா பெரிய பாயின்டை! போய் வருகிறேன். 26 சைஸ் சட்டையா? நாலுதான் கொண்டு வருவேன்.

மனைவி: ஏங்க, ஷர்ட் வருகிற வரைக்கும் புடவைங்களைப் பார்க்கலாமா?

சேல்ஸ்: ஏம்மா, நீங்க வாங்க வந்தது ஷர்ட்டா, புடவையா?

மனைவி: ஏங்க... ஷர்ட்தான்.

சேல்ஸ்: அப்போ எதுக்கு வீணா புடவைங்களைக் காட்டச் சொல்றீங்க? சும்மா அம்மா எடுத்துப் போட்டுப் பிரிச்சு மடிக்க வெச்சா அழுக்காகத்தான் ஆவுது. அப்புறம் யாரும் வாங்காமல் நின்னு போயிடுது.

மனைவி: என்னென்ன டிசைன், கலர் இருக்குது என்று பார்த்துக் கொண்டால், வேணும் என்கிறபோது வந்து வாங்கச் சௌகரியமாக இருக்குமே.

சேல்ஸ்: நீங்க சொல்றது கரெக்ட்தான், அம்மா. ஆனால் நீங்க வாங்க வர்ற வரைக்கும் விக்காம இருக்கும்னு என்ன நிச்சயம்? இன்னிக்கு வர்ற டிசைன்கள் நாளைக்கு வர்றதில்லே... உங்களுக்கு நான் சொல்றேன், புடவை வாங்கற சமயத்திலே புடவைங்களைப் பாருங்க... இதோ ஷர்ட் வந்துடுத்து... பாருங்க.

கணவன்: என்ன இரண்டு ஷர்ட்தானா?

நடேசன்: 26 சைஸ் இரண்டுதான் இருக்குதுங்க. இன்னும் நூறு ஷர்ட் வந்திருக்குது. ரேட் போட்ட பிறகு வர்ற மாசம் தான் சேல்ஸுக்குக் கொடுப்பாங்க.

கணவன்: சரி... இந்தக் கலர் சட்டையை வாங்கிக்கலாம். ஏங்க கலர் சாயம் போவுமா?

சேல்ஸ்: சார்... நானு சாயம் போடறேன்? சாயம் போவும் போவாதுன்னு எப்படிங்க சொல்ல முடியும்? ஆணைப்பட்ட ஆண்டவன், தலை முடிக்குக் கொடுக்கிற சாயமே வெளுத்துப் போவுது... பில் போடட்டுமா? 19 ரூபாய் 95 காசு.

கணவன்: இந்தாங்க, ஐம்பது ரூபாய் நோட்டு

சேல்ஸ்: 95 காசு சில்லறை இருக்குமா?

மனைவி: என்கிட்ட இருக்குதுங்க. இந்தாங்க.

சேல்ஸ்: அப்படியே பாருங்க. ஒன்பது ரூபாய் இருக்குதான்னு.

மனைவி: ஒன்பது ரூபாயா? இதோ இந்தாங்க.

சேல்ஸ்: ஒரு பத்து ரூபாயும் சேர்த்துக் கொடுத்துட்டாச் சௌகரியமாப் போயிடும்.... கடையிலே சில்லறை இல்லே.

கணவன்: இந்தாங்க பத்து ரூபாய்.

சேல்ஸ்: இந்தாங்க பில்... ஷர்ட். இன்னா கணேசா... பெரிய கழுத்தறுப்பாக வந்தாங்க இந்த ஆளும் அவரோட சம்சாரமும். கடையைத் தொறக்கச்சேயே வந்து ஆளைச் சாவடிச்சுட்டாங்க... சாயங்காலமா வர்றது. குடியா முழுகிப் போயிடும்? சரி, எடுப்பா ரேஸ் புஸ்தகத்தை!




பிலிப்ஸ்

புதிய பிலிப்ஸ் 3-பாண்டு

# கமாண்டர்

## இயந்திர வடிவிலே எழிலோங்கியது




ரூ. 440/-*

- இணையற்ற எர்கோனமிக் அமைப்பு
- பாண்டு தேர்வுக்கும் ஆன்-ஆஃப் வசதிக்கும் டாகிள் ஸ்விட்ச்கள்
- செட்டினுள்ளே ஓர் அடாப்டர் யூனிட்டைப் பொருத்தி மின்சாரத்திற்கு எளிதில் மாற்றலாம். (அடாப்டர் மாடல் 3012. ரூ. 50*)

* சில்லறை விற்பனை உச்ச விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது. மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.

**உன்னதமானவற்றை உங்களுக்கே வழங்க விரும்புகிறோம்.**

CASPR-603-203 TM



# பாம்

கல்பனா

விடிந்துவிட்டது.

குறுக்குத்துறை கோயில் கோபுரத்தின் தங்க ஸ்தூபி பளபளவென்று தேஜோமயமான கண்களால் நாலாபுறமும் பார்க்க ஆரம்பித்து விட்டது.

முருகன் கோயிலுக்கும் ஆற்றுக்கும் ஆழமான உறவு. ஆற்றின் நடுவேதான் இருந்தது அது. ஆறு இரு பிரிவாகப் பிரிந்து சுற்றி அணைத்துக் கொண்டு இப்பால் வந்து கை கோத்துக் கொண்டு போயிற்று.

சின்னப் பண்டாரம், அன்னக் காவடியைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு கிளம்புகையில்—

கால் பின்னுக்கு இழுத்தது. ஏழெட்டு அடி நடந்தவர் நின்று திரும்பிப் பார்த்தார்.—குருவை. அவர் நின்றதும் 'கிணிங்கிணிங்' என்று லயமிட்டுக் கொண்டு எழுந்த காவடி மணிகளின் ஓசையும் நின்றன.

அது குருவின் கவனத்தைக் கவர்ந்தது: சின்னப் பண்டாரம் பக்கம் திரும்பி ஏறிட்டுப் பார்த்தார் — 'என்ன' என்கிற மாதிரி.

''ஒண்ணுமில்லே, குருசாமி!'' என்று இழுத்தார் சின்னப் பண்டாரம்.

பெரியவர் புன்னகை பூத்தார்.—'தெரியாதோடா உன்னே?' என்கிற மாதிரி புன்னகை.

சின்னப் பண்டாரம் தன்னை விட வயதில் மூத்தவரானாலும் அவரைச் சாமி என்றுதான் குருஜி கூப்பிடுவார். அதே மாதிரி தம்மை விடப் பத்து வயது சிறியவராக இருந்தாலும் 'குருசாமி' என்றுதான் சின்னப் பண்டாரமும் பெரியவரை விளிப்பார்.

சின்னப் பண்டாரம் தனி ரகம். வாயிலே திருப்புகழ் மணக்கும். தேவாரம் குதிக்கும். திருமேனி முழுக்க சிவ சின்னம் துலங்கும். மொட்டைத் தலையிலும் கழுத்திலும் 'கொட்டைகள்' புரளும்.

எல்லாம் ஒரு அரை நாள் நாடகத்துக்குத்தான். 'வீதி உலா' வருகிற வரையில்தான். 'குருஜி'க்குச் சாப்பாடு போட்டுவிட்டு பாத்திரங்களைக் கழுவி வைத்து விட்டு, ராத்திரிக்கும் எடுத்து வைத்து விட்டால், - அப்பாடா' என்று மண்டபத்துக்கு வெளியே வந்து உட்கார்ந்து விட்டால் ஆளே மாறிப் போய்விடுவார். லோகாயதமான அரட்டைகள் — வம்புகள்.

இதற்கு நேர் மாறு பெரிய சாமி — குருஜி. பேச்சே கிடையாது. எப்போதாவதுதான், ரொம்பத் தேவைப்பட்டால்தான் பேசுவார். அதுவும் இரண்டொரு வார்த்தைகள்தான். ஒரு கேள்வி அல்லது ஒரு பதில் — அவ்வளவுதான். இல்லாவிட்டால் ஒரு கையசைப்பு.

சில சமயம் குருஜி, 'சஞ்சாரம்' கிளம்பி விடுவார். பாபநாசத்திலிருந்து ஆழ்வார் திருநகரி வரையில் ஆற்றின் கரையோரமாகவே போவார்; கரையோரமாக எந்தக் கிராமமாவது வந்தால் உட்கார்ந்து விடுவார். சின்னப் பண்டாரம் அன்னக் காவடியுடன் ஊருக்குள் போய்விடுவார். எத்தனை நாள் தங்கல், எப்போது புறப்பாடு என்று யாராலும் சொல்ல முடியாது.

பாபநாசம் போய், மலை ஏறி, முண்டந்துறை கடந்து, பாண தீர்த்தத்தில் நீராடிவிட்டு, பழையபடி இறங்கி, முண்டந்துறை கடந்து பாபநாசம் வர மூன்று மாதமாகி விட்டது.

மலை அடிவாரத்தில், வருணியில், தங்க மீன்கள் டாலடித்தன. பொரி போட்டார்கள். சின்னப்பண்டாரம் முண்டனம் போய்த் தாடி மீசை தாரியாகியிருந்தார். ராத்திரி வேளையில் தூக்கமில்லாமல் தவித்தார். புரண்டு புரண்டு நெளிந்தார்.

மரவாடியில் பெரிய 'சாமி'யைப்பார்க்கவும், விபூதி வாங்கவும் ஏகக் கூட்டம் வந்திருந்தது. ஒரு வாரமாவது தங்கி விட்டுத்தான் போக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார்கள்.

பனை ஓலையால் சிறு பந்தலும், ஒரு மறைப்பும் போட்டுக் கொடுத்தார்கள். பக்கத்திலேயே தாமிரவருணி சலசலத்து ஓடிற்று.

மறைப்புக்குப் பின்னால், குரு பணிவிடை இல்லாத போதெல்லாம், சிந்தாகுலராக உட்கார்ந்திருந்தார் சின்ன பண்டாரம்.

ஒருநாள் விளக்கு வைக்கும் நேரத்தில் மறைப்புக்கு அப்பால், ஒரு விம்மல் சத்தம் கேட்டது. ''சாமி, பெரிய பாவம் பண்ணிப்புட்டேன். இப்ப நல்லாத் தெரியுது. அதான் நான் விதைச்ச விதை ஒண்ணுகூட விளையலே. நான் பாவி; மகாபாவி — ''

''உனக்கு ரண்டு சம்சாரமா?'' குருவின் குரல் கேட்டது.

''ஆமா—''

''வந்திருக்காளா - ரண்டு பேரும்?''

''பெரியவ வரலே; சின்னவ வந்திருக்கா. கால் கழுவ ஆற்றுக்குப் போயிருக்கா. வந்துடுவா. பெரியவ வீட்டை விட்டு எங்கும் போறதில்லே—''

''உம் — ''

''சின்னநாச்சி — ஏலே புள்ளே — சீக்கிரமா வாடீ—''

சின்னப் பண்டாரம், படுதாவுக்கு அப்பால், இடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். உடம்பெல்லாம் பதறிற்று. எதிரே ஆற்றிலிருந்து புடவையைக் கணுக்கால் வரை ஏற்றிக் கொண்டு, ஒரு கிராமத்து அப்ஸரஸ் கரையேறி வந்து கொண்டிருந்தது. என்ன அழகு: என்ன அழகு — இப்படிக்கூட ஒரு பளீர் முகமா ஒளியா? பளபளப்பா?

இவரைப் பார்த்ததும் அவள் கண்கள் அகல விரிந்தன. கும்பிட்டாள். லேசாகச் சிரித்தாள். .

வெறுமனே தலையை ஆட்டி அதை அங்கீகரித்தார் பண்டாரம். அவள் அருகில் வந்து புடவைத் தலைப்பைத் திருகிக் கொண்டு தலை குனிந்து நின்றாள். அவர் பேசவில்லை. அவளும் பேசவில்லை.

''ஏலே புள்ளே — எங்கனே போயிட்டே?''

''இதோ வந்துட்டேன்.''

நிமிர்ந்து ஒரு பார்வையை வீசி விட்டு மெதுவாகத் திரும்பி மறைப்பைக் கடந்து சென்று மறைந்தாள்.

''இதோ வந்துட்டா சாமி?'' படுதாவுக்குப் பின் ஆண் குரல் கேட்டது.

''உம்.''

''சாமிக்கு வுளுந்து கும்பிடு புள்ளே'' வளையல்கள் குலுங்கின.

விழுந்தாள், கும்பிட்டாள். ''எழுந்திருக்கச் சொல்லு'' மீண்டும் வளையல்கள் குலுங்கின. எழுந்து விட்டாள், போலிருக்கு.

''சாமி, இதும் வயத்திலே ஒரு பூச்சி பொறக்கலேன்னு நான் அழிஞ்சே பூடுவேன். சாமிதான், சாமி கையாலே ஒரு உத்தரணி பால்'' என்றார் மாஜீ கிராம முன்சீப்.

''போயிட்டு வா.''

''கடைசி நம்பிக்கையா வந்தேன். மகா சித்த புருஷர்னு சொன்னாங்க. சாமியை விட என் பாவம் பெரிசா இருக்கறச்சே, யார்தான் என்ன செய்ய முடியும்?''

''போயிட்டு வா.''

கைவளை குலுங்கி நிமிர்ந்தது. சின்னப் பண்டாரம் எட்டிப் பார்த்தார். 'சீ நீ இவ்வளவுதானா?' என்கிற மாதிரி சின்ன நாச்சியின் கண்களில் அனல் ஜ்வலித்தது.

''கிளம்பு புள்ளே போவலாம்.''

அவள் கிளம்பவில்லை. பெரிய 'சாமி'யை விரோதி போல் பார்த்துக் கொண்டு நின்றாள். முகத்தில் பளீர் என்று மின்னி ஏதோ சேதி சொல்லிற்று. 'சீ! உன் தயவு எனக்கு எதுக்கு' என்று கேட்கிற மாதிரி மின்னிற்று. பார்வையிலேயே உடனேயே, அங்கேயே, ஒரு குழந்தையைப் பெற்றெடுத்து, அவர் காலடியில் கிடத்தி, 'இப்ப என்னய்யா சொல்றே' என்று கேட்டு விடுவாள் போலிருந்தது.

சின்னப் பண்டாரம் ஆகாசத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார்.

''குருசாமி—'' என்று விழுந்து வணங்கி நின்றார் சின்னப் பண்டாரம்.

'என்ன?' என்பது போல் நிமிர்ந்து பார்த்தார் குருசாமி.

நரை கலந்த தாடியும் புழுதியும் செம்மண்ணும் சூரிய ஒளியில் டாலடித்தன.— சின்னப் பண்டாரத்தின் முகத்தில். பக்கத்திலேயே ஒரு மொட்டைத் தலை ஆள் நின்றான்.

''கும்பிடுலே, சாமிக்கு'' — அதட்டினார் சின்னப் பண்டாரம். தடால் என்று விழுந்து எழுந்து கையது கொண்டு வாயது பொத்தி நின்றான் மொட்டை.

''பத்து இருபது நாளைக்கு 'சாமி'க்குச் சோறு ஆக்கிப் போடப் போறது இவன் தான் — அரிசி வெறகு எல்லாம் இருக்கு.''

''நீங்க எங்கே போறீங்க?'' என்று கேட்டார் குரு.

''காடா வளர்ந்து போச்சு தாடியும் தலையும். இருப்பதி போயிச் குடுத்துட்டு வந்துடலாம்னு யோசனை... உத்தரவு வேணும்''

''போய் வா.''

காலம் ஓடுகிறது வேகமாய்; விரைவாய்.

இருபது உதயமும், இருபது அஸ்தனமும் வந்துவிட்டுப் போய்விட்டன. ஒரு நாள் மாலை இருட்டின பிறகு, சத்திரத்துக் குறட்டோரம், நிழலாக ஏதோ உட்கார்ந்திருப்பதைப் பார்த்துவிடுகிறார் குருசாமி.

''யாரு?''



''நான்தான் சாமி—'' ஈன சுவரத்தில் வருகிறது குரல். இருளிலும் தலை மொட்டை பளபளக்கிறது. சந்தன மணம் வீசுகிறது.

''அட, நம்ப சாமியா? வாங்க! ஏன் அங்கேயே உட்கார்ந்துட்டீங்க?''

பேசாமல் உட்கார்ந்திருக்கிறார் சின்னப் பண்டாரம். — மௌனமாய்த் தரையைப் பார்த்துக் கொண்டு. பிறகு தயங்கித் தயங்கி உள்ளே வருகிறார்.

**கா**லையில் ''சாமி புறப்பட்டுடுச்சு'' என்று கூவிக்கொண்டு ஓடி வந்து எழுப்புகிறான், பையன். ''ஆங்'' என்று கூவிக் கொண்டு எழுந்து காவடியுடன் ஓடுகிறார் சின்னப்பண்டாரம்.

நதியில் இரு கரையும் தொட்டுக் கொண்டு ஓடுகிறது, பிரவாகம். காலைக் கிரணங்களில் பொன்னை உருக்கி வார்த்தது போலிருக்கிறது.

நதிக் கரை ஓரமாகவே குரு — சிஷ்ய பயணம், இப்போது கிழக்கு நோக்கிப் போகிறது. குரு — உசரமாய், விசுவரூபமாய்; பின்னால் அவர் நிழலில் கூனிக் குறுகிப் பின் தொடர்கிறார் சீடர்.

காலம் ஓடுகிறது.

இப்போது சின்னப் பண்டாரம் அடியோடு மாறிவிட்டிருக்கிறார். பேச்சுக் குறைந்துவிட்டது. கடமைகள் முக்கியத்துவம் பெற்று விட்டன.

இப்பொழுதெல்லாம் பெரிய 'சாமி' ஒரே இடத்தில் பல நாட்கள் மாதங்கள் கூடத் தங்குவது உண்டு. அப்படித்தான் இப்போதும், இங்கே, இந்தக் குறுக்குத் துறையில், முருகன் கோயிலுக்கு எதிரில், மணல் மேட்டில், ஒரு சின்னஞ் சிறு பாழ் மண்டபத்தில் தங்கியிருக்கிறார்.

**கா**லையில் எழும்போதே சின்னப் பண்டாரத்துக்கு மனம் சரியாக இல்லை. குருவை வணங்கி, காவடியுடன் கிளம்பும்போது கால் பின்னுக்கு இழுத்தது. இருப்பினும் வெளியே சென்று வந்தார் சின்னப் பண்டாரம். உச்சிக்குச் சற்று முன்னால், அவர் 'ரவுண்டில்' இருந்து திரும்பி வந்தபோது மண்டபத்தில் பல வர்ணப் புடவைகளும் வெள்ளை வேஷ்டிகளும் தெரிந்தன.

ஒரு சிறு குழந்தை குரு சாமியின் காலடியில் கிடந்தது. ஒரு பெண்ணும், அவள் கணவனும் சேவித்து எழுந்து கொண்டிருந்தார்கள். இன்னொருத்தி அரக்கப் பரக்கப் பார்த்துக் கொண்டு அருகில் நின்றாள்.

''இது சாமி இட்ட பிச்சை.''

குரு சாமி அவர்களைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. எங்கோ மேலே சுவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அது 'அவள்'தான்! அந்த ஆள் அவள் புருஷன்தான். மரவாடி மாஜி இ. மு.தான். கால் பின்னிழுக்க, வாசலிலேயே நின்று தியங்கத் தொடங்கி' காவடி மணிகளை 'கப்' பென்று பிடித்து நிறுத்தின சின்னப் பண்டாரம் திகைத்து நின்றார்.

''சாமியை நான் சரியாப் புரிஞ்சுக்கலை. 'போய்யா'ன்னதும் போயிட்டேன். பின்னாடியே சிஷ்யப் பிள்ளையை அனுப்பிச்சு, 'பால்' கொடுக்கும்படி செய்வீங்கன்னு நினைக்கலை—''

குருசாமி மேலேயே பார்த்துக் கொண்டிருந்தார்.

''கும்பிடுங்கடி, இன்னொரு வாட்டி. நாம நரகத்திலே விழுந்து நாசமாகமே பிள்ளையைக் குடுத்த மகானுடி சாமி.''

இருவரும் விழுந்து கும்பிட்டபோது வளையல் நலியுடன், யாரோ 'களுக்'கென்று சிரித்த மாதிரியும் இருந்தது. யார் சிரித்தது? திடுக்கிட்டார், சின்னப் பண்டாரம்.

''சாமி, என்னை மன்னிக்கணும்'' என்று ஆரம்பித்தார் மரவாடி மாஜி இ. மு. ''போயிட்டு வான்னு நிர்தாட்சண்யமா அனுப்பிச்சபோது கொஞ்சம் கோபமாகத்தான் போனேன். ஊரிலே போயிக்கூட 'என்ன பெரிய சாமி'ன்னு கன்னு பின்னுன்னு இட்டினேன். ஒரு நாள், தாடியும் மீசையுமா, கையிலே கலயத்தோட சின்ன சாமி வந்து நின்னு, 'சாமி' அனுப்பிச்சாரு. நான் பால் கொடுக்க வந்திருக்கேன். எட்டு நாள் உன் இரண்டாவது சம்சாரத்தை உட்கார வைச்சு, விரதம் காத்து, பூஜை பண்ணி எட்டு வீட்டு நடுப்பகல் பிட்சை அன்னத்தைப் பாலாக்கி, ஊரும் காதும் தெரியாமே, மந்திரோச்சாடனம் பண்ணிக் கொடுக்கணும். ஒரு 'ரூம்' தயார் செய்; மஞ்சள்ளே நனைச்சப் புடவை கட்டி, அதிலே அவளைக் கொண்டாந்து உட்கார்த்து. அவ கூட ஒரு மண்டலம் யாரும் பேசக்கூடாது' என்று சொன்னப்பத்தான் சாமியோட கருணை மனசைத் தெரிஞ்சுக்கிட்டேன்.''

மீண்டும் 'களுக்'கென்று அதே எக்காளச் சிரிப்பு. அரை க்ஷணம்தான் அது ஒலித்தது. ஆனால் குருஜியையே அது தாக்கி, தலையைத் தாழ்த்திச் சுற்றி 'யார் சிரித்தது?' என்கிற மாதிரி பார்க்கச் செய்து விட்டது.

''இதுக்கு இன்னும் பேர் வைக்கலை. பெத்த தகப்பன்தான் பேர் வைக்கணும். இது என் பிள்ளை இல்லை. சாமியோட கருணையினாலே வந்த பிள்ளை. சாமிதான் இதுக்குப் பேர் வைக்கணும்.''

---

''எங்கம்மாவுக்கு உங்களிடம் தனி அன்பு உண்டு என்று சொன்னால் நம்பவில்லையே! இதோ பாருங்க நம்ப தலை தீபாவளிக்குச் செய்த ஸ்வீட்டை அப்படியே வைத்திருந்து இப்போ கொடுக்கிறாள்!''



குழந்தையைக் குனிந்து பார்க்கிறார் குரு: அது குருத்தோலை மாதிரி பட்டுத் துணியில் கிடக்கிறது, அவர் காலடியில். சிரிக்கிறது.

''இது உன் பிள்ளை இல்லே—'' என்கிறார் குரு சாமி திடீரென்று அதிர் வேட்டைப் போட்டாற் போல. அதிர்ந்துதான் போகிறார்கள் வந்தவர்கள்.

''சாமி—''

''இது உன் வயத்திலே வைக்க வந்த நெருப்பு.''

''சாமி—''

''ஏழை, பாழை, எளியவ, போக்கத்தவ, புருஷனை இழந்தவன்னு உன் இ. மு. உத்தியோகத் திமிருலே அதட்டி, மிரட்டி, கிராமத்துலே நீ வீடு வீடாப் புகுந்து ரகசியமா, ஒவ்வொரு கருப்பையிலேயும் நீ கொட்டி எரிய வைச்சுட்டு வந்த தீடா இது — தீ! இப்போ, இன்னிலேருந்து உன்னை, உன் மனசைச் சுட்டெரிக்க உன் கிட்டே வந்திருக்கு.''

இடியோசையாக விழுகிறது, ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு வாக்கியமும். அதிர்ந்து போய், மருண்டு, மயங்கி நிற்கிறது அந்த மாஜி இ. மு. மிருகம்.

குரு 'சாமி' சட்டென்று திரும்பி, வாசலைப் பார்த்து, கையை அசைக்கிறார். தம் மைத்தான் என்று அறிந்து கொண்டு, காலடியை ஓரமாக இறக்கி வைத்து விட்டு, தலை குனிந்து நிற்கிறார், சின்னப் பண்டாரம்.

''எடுத்துக்கோ, இதை'' என்று குழந்தையைக் காட்டுகிறார் குரு.

''சாமி சாமி'' என்று பதறுகிறார் சின்னப் பண்டாரம்.

''உம்... டயமாச்சு... அவங்க போகணுமே—''

பதறும் கைகளுடன் குழந்தையை எடுத்துக்கொள்ளும்போது அவர் உடல் எல்லாம் வெட வெட வென்று நடுங்குகிறது. எல்லாருக்கும் தெரிகிறது, அந்தநடுக்கம். குழந்தையை மார்போடு சேர்த்துக் கொள்கிறார். தம் பட்டுக் கையால் அவர் மார்பைத் தொடுகிறது அது. சிரிக்கிறது.

''பெத்த தகப்பன்தான் பேர் வைக்கணுமாம். பேர் சொல்லுங்க சாமி—'' என்று கம்பீரமாகக் கட்டளை இடுகிறார் குருஜி.

''நானு... நானு... சாமி!'' என்று பதறிக் கதறுகிறார் சின்னப் பண்டாரம். உள்ளூற அடியோடு தகர்ந்து விட்டவர் மாதிரி இருக்கிறது. ''நான் தப்புச் செஞ்சுட்டேன்; சாமிக்கு எங்கே தெரியப் போகுதுன்னு நினைச்சுட்டேன்'' என்று கதறுகிறார்.

'சட்'டென்று அவர் கதறல் நிற்கிறது. ஆவேசம் வந்தவர் போல வலக்கையை நீட்டி இ. மு. வின் முதல் சம்சாரத்தைச் சுட்டிக் காட்டி அலையாக வார்த்தைகளைக் கக்குகிறார்:

''இவ என் சம்சாரம். ஆடி தவசுக்கு சங்கரநாயினார் கோயிலுக்குப் போயிருந்தப்ப, இந்தப் பேமானிப் பய ஏமாத்தி இழுத்துக் கிட்டுப் போயிட்டான். அடி நெஞ்சுலே நெருப்பா இருந்துச்சு அது... அந்த நெருப்பு தாளாமத்தான் பண்டாரமா ஓடி வந்தேன். அந்த நெருப்பை இவன் நெஞ்சுக்கு மாத்த இப்படி ஓர் அயனான சந்தர்ப்பம் கிடைச்சது.



''அடியே! நம்ப ரேடியோ அறிவிப்பாளர் மாப்பிள்ளை லெட்டர் போட்டிருக்கார் படிக்கிறேன் கேளு:

''எதிர்பாராத தடங்கலினால் தீபாவளி நிகழ்ச்சிக்கு வர முடியாமல் ஏற்பட்ட தடங்கலுக்கு வருந்துகிறோம்.''

மாத்திட்டேன்.... சாமி! இதுச்கு அப்பன் நான்தான்.....''

''ஆங்'' என்று இமயமே தலையில் சரிந்தாற்போல் விக்கித்து நிற்கிறது இ. மு. மிருகம்.

''சாமி சொன்னது சத்தியம். இந்தப் புள்ளையை அது நெருப்புன்னு சொல்லிச்சு. இது நெருப்புத்தான். இந்த நெருப்பு ஒரே சமயத்தில இந்தப் பொட்டைப் பயலையும் என்னையும் சுட்டு உண்மையைக் கக்க வச்சுடுத்து. என்னை மன்னிச்சுடு'' என்று கதறுகிறார் சின்னப் பண்டாரம்.

''உஷ்'' என்று அவரை அடக்குகிறார் குரு. ''அந்தப் பெண் பாலை அவர் கிட்டக் குடுமய்யா'' என்கிறார்.

குழந்தையை நேரடியாகக் கொடுக்க மனசில்லாமல் கீழே கிடத்துகிறார் சின்னப் பண்டாரம்.

''எடுத்துக்கடா—''

தயங்குகிறார் இ. மு. ''அவங்க அவங்க பாவத்தை அவங்க அவங்கதான் சுமக்கணும். எடு, கையிலே!'' — அந்த அதட்டலில் பயந்து குழந்தையை எடுத்துக் கொள்கிறார் இ.மு.

''ஆனு, பாவம்னு நினைச்சோ, பொய் பால்னு நெனைச்சோ, இதை எடுத்துட்டுப் போயி, இதையும் உன்னையும் இது வளர்ந்த நிலத்தையும் சித்ரவதை பண்ணாதே. ஞானப் பாலா நெனைச்சு எடுத்துட்டுப் போ... ஒரு முக்கியமான ஞானம் வந்துடுச்சில்லே இப்ப.. இனிமே எங்கியும் நெருப்பைக் கொட்ட மாட்டியே. கொட்டினா அது திரும்ப நம்ப கிட்டயே வந்துடுங்கிற ஞானம் வந்துடுச்சில்ல- அது போதும், போ!''

குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு, மனைவிமார் பின்தொடர, திடீரென்று கிழடாகிவிட்ட தோற்றத்துடன் பின்னே போகிறார் இ. மு.

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

— ராஜ்மோகன் காந்தி —

ஆகஸ்டு மாதத்தில் லண்டன், ஜாதி மதப் பிரிவினைகளுடன் கூடிய தேர்தல் திட்டத்தை வெளியிட்டது. இதன்படி 'தீண்டாதாரு'க்கென்று சட்ட சபையில் தனி இடங்கள் உண்டு. அவர்களைத் 'தீண்டா' தாரே தேர்ந்தெடுப்பார்கள்.

இதே போல் முஸ்லிம் வாக்காளர்கள், சீக்கிய வாக்காளர்கள் என்று தனித் தனியே பிரிக்கப்படுவார்கள். இவை எல்லாமே காங்கிரஸின் விருப்பத்துக்கு விரோதமானவை. எனினும் பின்னது இரண்டுக்கும் தமது உயிரைப் பணயம் வைத்துப் போராடுவது நியாயமாகாது என்று காந்தி எண்ணினார். ஆனால் 'தீண்டாதாரை'ப் பிரித்து அவர்களை ஒரு தனித் தினிசர் போலாக்கி விடுவது என்பது வேறு விஷயம். அது ஹிந்து சமூகத்தையே பிளவு படுத்திவிடும். ஹிந்து மதத்துக்குள்ளேயே இருக்கும் விரிசலை நேராக்கி இணைக்க சீர்திருத்தவாதிகள் பாடுபட்டுக் கொண்டிருக்கும்போது இந்த ஏற்பாடு அவர்கள் முயற்சியைக் கெடுத்துவிடும். செப்டம்பர் 20ம் தேதி தமது உண்ணாவிரதம் தொடங்கும் என்றார் மகாத்மா.

இதெல்லாம் எங்கு கொண்டு விடும், எப்படி முடியும் என்பது ஒருவருக்கும் தெரியவில்லை. இந்தியா கவலைப்பட்டது. அனைவரிலும் அதிகமாக மறுபடியும் ஸி. ஆர். தான் கவலைப்பட்டார்.

''இந்தத் தியாகத்துக்கு முட்டுக்கட்டை போடுவதில் உறுதியாக இருக்கிறேன்'' என்ற அவர் காந்தியைப் பேட்டி காண முயன்றார். அரசு அனுமதிக்கவில்லை. உண்ணாவிரதத்தைக் கைவிடுமாறு கோரி மகாத்மாவுக்கு அவர் தந்தி அனுப்பினார். காந்தியின் பதில்:

''கவலைப்பட ஏதுமில்லை. மாறாக, உனது சகா ஒருவனுக்குத் தாழ்த்தப்பட்டோர் நலனுக்காக இறுதியாக ஒரு சத்தியாக்கிரஹ முயற்சியில் ஈடுபடும் வாய்ப்பினைக் கடவுள் அளித்திருக்கிறார் என்பதற்காக நீ குதூகலமடைவாய் என்றுதான் எதிர்பார்க்கிறேன்.''

## 40. சிறைக்குள்ளே சீரிய சிந்தனை

''அறிவிலிகளும் மூட நம்பிக்கை உள்ளவர்களும் இரு வார காலத்துக்குள் தாங்கள் புத்திசாலிகளாகவும் வீரர்களாகவும் மாறப் போவதாகத் தீர்மானிக்கா விட்டால் அதற்காக இறந்து போவேன் என்று பயமுறுத்துவது சரியா?'' என்று ஸி. ஆர். யோசித்தார். மீண்டும் மன்றாடிய ஸி. ஆருக்கு மகாத்மா பதில் அளிக்கையில், ''இருளிலிருந்து ஒளி பிறப்பதைச் சீக்கிரமே காண்பீர்கள்'' என்று நம்பிக்கையுடன் எழுதினார். ''அன்புடன், மேன்மேலும் அன்புடன்'' என்று தம் கடிதத்தை முடித்தார்.

சரியோ, தப்போ, பயமுறுத்தியாகிவிட்டது. இப்போதைய பிரச்னை உண்ணாவிரதம் இருப்பவருடைய உயிர்தான். அதைக் காப்பாற்ற இரு வழிகள் உண்டு. லண்டன் பின் வாங்கலாம் அல்லது இந்து சமூகம் — ஜாதி ஹிந்துக்களும் தீண்டாதாரும் ஒன்றாகச் சேர்ந்து மாற்றுத் திட்டம் ஒன்றை ஒப்புக் கொள்ளலாம். (இரு சாராரும் இணைந்து தீர்மானிக்கிற திட்டத்தைத் தானும் ஏற்பதாக லண்டன் உறுதியளித்திருந்தது.)

இரண்டாவது பாதையில் முட்டுக்கட்டை மிகுதி. சத்தியாக்கிரஹம் எவ்வளவுதான் மேன்மையானதாக இருந்தாலும் அது, காலம் காலமாக வந்துள்ள அறியாமையையும் மூட நம்பிக்கையையும் தகர்த்துவிடும் முயற்சியில் ஒருவேளை தோல்வி அடைந்து விடலாம் என்று ஸி. ஆர். எண்ணினார். ''நமக்கு இருக்கும் ஒரே நம்பிக்கை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கையில் மாறுதல் ஏற்படலாம் என்பதுதான்'' என்று அவர் தம் கருத்தைச் சொன்னார். ஆனால் லண்டன் தன் நிலையைத் தெளிவாக்கி விட்டது. ஜாதி ஹிந்துக்களும் தீண்டாதாரும் ஒற்றுமையாக ஒருமித்த ஒரு மாற்று முடிவுக்கு வந்தாலொழிய அரசு தன் திட்டத்தை அமல்படுத்தும்.

இதன் பிறகுதான் எதிர்பாராதது நடந்தது. தாழ்த்தப்பட்டோர் நம்ப முன் வருவார்களேயானால் அந்த நம்பிக்கையைப் பெறும் முயற்சியில் ஹிந்து சமூகம் தனது பழக்க வழக்கங்களைப் புனர் பரிசீலனை செய்யத் தயாராயிற்று.

இந்தப் புதிய முயற்சி பலனளிக்குமா என்பதில் ஆரம்பத்தில் ஸி. ஆர். சந்தேகம் கொண்டிருந்தாலும் பின்னர் அவர் இம் முயற்சியில் மனம் வாக்கு காயத்தால் முழுமையாக ஈடுபட்டார். அவர் காங்கிரஸின் தாற்காலிகத் தலைவர், காந்தியுடன் நெருங்கி இருப்பவர், ஒரு பிராமணர் என்ற மூன்று

---

இவர்: நீங்க உண்மையான இலக்கிய சேவை செய்ய ஒரு வழி சொல்லட்டுமா?

ஆசிரியர்: தாராளமாகச் சொல்லுங்க!

இவர்: நீங்க எழுதறதை நிப்பாட்டுங்க! அது போதும்!

ஆர். கண்ணன்



காரணங்களால் மும்மடங்கு பொறுப்பு பெற்றிருந்தார். அவரது யோசனைப்படி செப்டம்பர் 20ந் தேதி தேசம் முழுவதும் உண்ணாவிரதம் அனுஷ்டிக்கப்பட்டது. அன்று எண்ணிக்கையில் அடங்காத வீடுகளில்—'தீண்டாதார்' வாழ்ந்த இல்லங்கள் உள்பட — பொழுது சாய்ந்து இருள் கவிகிறவரை சமையல் அறையில் அடுப்பு எரியவில்லை.

உண்ணாவிரதம் தொடங்கியதும் ஹிந்துத் தலைவர்கள் ஒரு தீர்வு காணும் முயற்சியில் காந்தியைச் சந்திக்க அனுமதிக்கப்பட்டனர். இந்த வாய்ப்பை வெகு சீக்கிரம் பயன்படுத்திக் கொண்டவர்களில் ஸி. ஆர். ஒருவர். அவர் மகாத்மாவின் நிபந்தனைகளைப் பெற்றார். லண்டன் தந்திருந்ததை விட அதிக இடங்களைத் 'தீண்டாதாரு'க்குச் சட்ட சபைகளில் கொடுக்க காந்தி தயாராக இருந்தது மட்டுமல்ல; அதில் ஆர்வமும் காட்டினார். ஆனால் வாக்காளர் 'தீண்டாதார்'—ஜாதி ஹிந்துக்கள் என்று பிரிக்கப்படாமல் ஒட்டு மொத்தமாக இருக்க வேண்டும்.

உண்ணாவிரதம் காரணமாக எரவாடாவுக்கு அவசரம் அவசரமாகச் சென்றிருந்த ஹிந்து அரசியல்வாதிகள் (காங்கிரஸ்—லிபரல் — சுயேச்சை) 'தீண்டாதா'ருக்கு முன்னிலும் அதிகமான பிரதிநிதித்துவம் சட்ட சபைகளில் இருப்பதற்குச் சம்மதித்தார்கள். அவர்களில் ஒருவரான சப்ரூ வாக்காளர்களைப் பிரிக்காமல் சட்டசபையில் பல ஸ்தானங்களை மட்டும் தாழ்த்தப்பட்டோருக்கு என்று ஒதுக்கி வைத்துவிட முடியும் என்பதை உணர்த்தினார். தாழ்த்தப்பட்டோருக்கு என்று சில தொகுதிகளைப் பிரத்தியேகமாக ஒதுக்கி விடலாம். அத்தொகுதிகளில் ஒவ்வொன்றுக்கும் வேட்பாளர் குழு ஒன்றினைத் தாழ்த்தப்பட்டோர் தங்களுக்குள்ளே தேர்ந்தெடுப்பார்கள். இத்தகைய குழுக்களில் இடம் பெற்றிருப்போருக்குத்தான் தாழ்த்தப்பட்டோருக்கென்று ஒதுக்கப்பட்ட தனித் தொகுதிகளில் வேட்பாளராக நிற்க உரிமை உண்டு. ஆயினும் அத்தொகுதி வாக்காளரைப் பொறுத்த வரை தாழ்த்தப்பட்டோர், ஜாதி ஹிந்துக்கள் என்ற பிரிவினை இராது. ஒட்டு மொத்தமாகச் சாவடிக்குச் சென்று தங்கள் தங்கள் கருத்துப்படி வோட்டுப் போடுவார்கள்.

மகாத்மா மட்டுமின்றித் தாழ்த்தப்பட்டோரின் முக்கியமான தலைவரான அம்பேத்காரும் இதனைக் கொள்கை அளவில் ஏற்றுக் கொண்டார். ஆயினும் முக்கியமான விவரங்கள் இன்னும் விவாதித்து ஒப்புக்கொள்ளப் பட வேண்டியிருந்தன. மகாத்மாவோ பலவீனமடைந்து வந்தார்.

தமது கொட்டடியிலிருந்து பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்த சிறைச் சாலைக் காரியாலயம் வரை கூட இனி நடக்க முடியாத நிலையில் இருந்தார் மகாத்மா. சிறைச் சாலைக்குள்ளேயே ஒரு மாமரத்துக்கு அடியில் வெண்மையான மருத்துவ மனைக் கட்டில் ஒன்றில் அவர் படுக்க வைக்கப்பட்டார். மாமரத்தின் அடியில் இருந்த அந்தச் சிறிய இடம் தேசத்தின் கவலையோடு கூடிய கவனத்துக்கு உள்ளாயிற்று. அவ்விடத்தில் பிடிவாதமாகப் பேரம் பேசுகிற தேசத் தலைவர்கள் சிலர் குழுமியிருந்தனர்.

தனித் தொகுதிகள் 'குறைந்தபட்சம் இருபத்தைந்து ஆண்டுகளுக்காவது நீடிக்க வேண்டும் என்று அம்பேத்கார் கருதினார். இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு அபிப்பிராய வோட்டெடுப்பு நடத்தி அதன் மூலம் தாழ்த்தப்பட்டோர் இத் தனித் தொகுதிகள் நீடிக்க வேண்டும் என்று விரும்புவதாகத் தெரிய வந்தால் மேலும் 25 ஆண்டுகளுக்குத் தனித் தொகுதிகள் நீடிக்க வேண்டும் என்று சொன்னார்.

அபிப்பிராயத் தேர்தல் நீண்ட காலத்துக்குப் பிறகு நடக்குமெனில் தனித் தொகுதிகள் என்பது நிரந்தரமான விஷயமாகி விடும் என்று கருதிய மகாத்மா, ஐந்தாண்டுகளுக்குப் பிறகு தாழ்த்தப்பட்டோரிடையே அபிப்பிராயத் தேர்தல் நடத்தலாம்; இதன் பிறகு ஒவ்வொரு பத்தாண்டு முடிவிலும் அபிப்பிராயத் தேர்தல் நடத்தலாம் என்றார். அம்பேத்கார் இந்தக் கால அட்டவணையை நிராகரித்தார். மிகவும் களைப்புற்ற காந்தி, ''ஐந்தாண்டு அல்லது என் உயிர்'' என்றார் அவரிடம்.

விட்டுக் கொடுக்காமல் இருப்பது அம்பேத்காருக்குச் சிரமமாக இருந்தது. எனினும் தமது சகாக்களுடன் நீண்ட நேரம் ஆலோசித்த பிறகு பத்தாண்டுகளுக்குக் குறைவான காலகட்டத்தைத் தம்மால் ஏற்க முடியாது என்று அறிவித்தார். இதற்குள் மகாத்மாவின் நிலை உயிராபத்தானதாகி விட்டது. உருவான நம்பிக்கைகள் சிதறுண்டு போகும் போல் தோன்றியது.

ஸி. ஆர்.தான் சிக்கலிலிருந்து விடுபட வழி காட்டினார். கால அட்டவணை பற்றி எதிர்காலத்தில் பரஸ்பரம் பேசி முடிவு செய்துகொள்ளலாம் என்று விட்டுவிடுங்கள் என்று அம்பேத்காரிடம் கேட்டுக் கொண்டார். அம்பேத்கார் ஒப்புக் கொண்டார்.

(தொடரும்)

தமிழாக்கம்: வி. ராஜேந்திரன்

---

இரண்டு பெண்களுக்குப் பின்னால் நாலு வாலிபர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். ஒருவன் விஷமத்தனமாகச் சொன்னான்:

''நாம் நால்வர் இருக்கிறோம். ஆனால் இரண்டு பெண்கள்தானே இருக்கிறார்கள்?''

இது காதில் விழுந்ததும் ஒரு பெண் சீறினாள்: ''இரண்டு பெண்கள்தான் இருக்கிறோம். ஆனால் செருப்புகள் நான்கு இருக்கின்றன. கவலை வேண்டாம்!''

-எஸ். சந்திரசேகர்



தீபாவளி நல்வாழ்த்துக்கள்





நான்ஆனான் தான்ஆனான் நானும்தா னும்ஆனான்
தேன்ஆனான் தென்அமுதாய்த் தித்தித்து நிற்கின்றான்
வான்ஆனான் ஞான மணிமன்றில் ஆடுகின்றான்
கோன்ஆனான் என்டன் குலாவுகின்ற கோமானே

— திருஅருட்பா

# கடுகு பதில்கள்!



நாக சுந்தரம், தாம்பரம்

✖ கே. யாருடைய வாழ்க்கை வரலாற்றைப் படிக்கலாம் என்று யோசனை சொல்லுங்கள்.

பதில்: என்னைக் கேட்டால் தாமஸ் ஆல்வா எடிசனின் வாழ்க்கை வரலாற்றை ஒவ்வொருவரும் கட்டாயமாகப் படிக்க வேண்டும் என்பேன். கிட்டத்தட்ட 1100 கண்டுபிடிப்புக்களுக்குக் காரணமான எடிசனின் வாழ்க்கை அற்புதமானது. இவரது வரலாறு மனிதனை உயர்த்தும். பிரச்னைகளைச் சமாளிக்கும் மனத் திண்மையை அளிக்கும்.



என். ஹரிஹரன், மதுரை-11

✖ கே. நகைச்சுவையாக எழுதிப் பழக்கம் உண்டா?

ப: இப்படி ஒரு கேள்வி கேட்டு ஒரு மூட்டை கரியை அரைத்து என் முகத்தில் பூசியிருக்க வேண்டாம்.

பி. தண்டபாணி, திருப்பூர் 2

✖ கே. மொரார்ஜி தேசாயின் எதிர்காலம் எப்படி இருக்கும்?

ப: என் பெயர் பி. டி. சுந்தரம் அல்ல.

பரிசு பெறுபவர்:

**ஜி. எஸ். பாண்டியன்,**
**118, எண்ணெய்க்காரத் தெரு.**
**காஞ்சிபுரம்.**



எஸ். கணபதிராமன், கோவில்பட்டி

✖ கே. சினிமா நட்சத்திரங்களைப் பற்றிய கிசு கிசு செய்திகள் பிடிக்குமா?

ப: எல்லாக் கிசுகிசு செய்திகளும் எல்லாருக்கும் பிடிக்கும் — அதில் தங்களைப் பற்றி வராதவரை.

எஸ். லலிதா, தேவகோட்டை

✖ கே. சுறுசுறுப்பாக இருக்கத் தேனீயை உதாரணம் காட்டுவது ஏன்? எறும்பை விடவா சுறுசுறுப்பானது அது?

ப: எறும்பு தான் சேகரிக்கும் பண்டத்தைத் தானே சாப்பிடுகிறது. தேனீ சேகரிக்கும் தேன் மனிதனுக்கு உபயோகப்படுகிறது. அந்த நன்றியுணர்வால்தான் தேனீயைப் பாராட்டுகிறோம்.

ஜி. ஆர். பிரபாகரன், மாதுங்கா

✖ கே. கம்யூனிசம் சிறந்ததா? காபிடலிஸம் சிறந்ததா?

ப: இந்தக் கேள்விக்கு நேரடியாகப் பதில் தரப்போவதில்லை. எப்போதோ படித்த நகைச்சுவை விளக்கத்தைத் தருகிறேன்.

கம்யூனிஸம்: உங்களிடம் இரண்டு



பசுக்கள் இருந்தால் அவைகளை அரசாங்கத்திடம் கொடுத்து விட வேண்டும். அரசாங்கம் உங்களுக்குப் பால் சப்ளை செய்யும்.

நாஜிஸம்: அரசாங்கம் உங்களைச் சுட்டு விட்டு, பசுக்களை எடுத்துக் கொள்ளும்.

காபிடலிஸம்: ஒரு பசுவை மட்டும் விற்றுவிட்டுப் பதிலுக்குக் காளையை வாங்குவது.

ஜி. எஸ். பாண்டியன், காஞ்சிபுரம்

✖ கே. உ. ராஜாஜி போன்றோர் எழுதிய நூல்களுக்கான, சிரிப்பு வராவிட்டாலும் பத்திரிகைகளில் பிரசுரிக்கிறார்களே.

ப: உலகம் பலவிதம். சிலருக்குச் 'சிரிப்பு' வருவது வேறு சிலருக்கு 'எரிப்பு' வருவதாக இருக்கும். புடவைக் கடைக்குப் போய்ப் பாருங்கள். நூற்றுக் கணக்கான புடவைகளை எடுத்துப் போடச் சொல்லிப் பார்த்துவிட்டு, ஒரு புடவையும் நன்றாக இல்லை என்று சொல்லிவிட்டுப் போவதைப் பார்க்கலாம். அப்படி யானால் இந்தப் புடவைகளை யாருமே வாங்க மாட்டார்களா? விற்பனை ஆவதில்லையா? ருசிப்பதும் ரசிப்பதும் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருந்து விட்டால் வாழ்க்கையே பெரிய 'போர்' ஆகிவிடும். (உ. ராஜாஜியிடமிருந்து நன்றி தெரிவித்து ஒரு கடிதத்தை எதிர்பார்க்கிறேன்!)

# ''உடற் பயிற்சி இன்றி உருப்படுவதா?

## ஒரு நாள் ஒரு சவால்!

தினமும் காலையிலும் மாலையிலும் உடலின் ஒவ்வொரு பகுதியாக உடற்பயிற்சி செய்பவர் திரு பத்ரிநாத். அதிலும் மற்றொருவர் கூடச் சேர்ந்து செய்தால்தான் தனது முன்னேற்றம் தெரியும் என்பது பத்ரியின் கருத்து. நண்பருடன் காலைப் பயிற்சிக்கு ஆயத்தமாக இருந்தபோது, நான் போய்ச் சேர்ந்து வந்த நோக்கத்தை விளக்கினேன். பத்ரிக்கு ஒரு நிமிடம் என்ன சொல்வதென்றே தெரியவில்லை. நண்பர் ரஸலிடம் தாம் வருவதற்கில்லை என்றும் அவர் தனியே பயிற்சியைத் தொடங்குமாறும் கூறிவிட்டார். ரஸல் என்னை ஒரு முறை முறைத்துப் பார்த்து விட்டுச் சென்றார்.

''சார் ஒரு முழு நாள் உடற் பயிற்சி செய்யா விட்டால் என் உடம்பே கட்டுத் தளர்ந்துவிடும்'' என்று பரிதாபமாகக் கூறியவாறு என்னைப் பார்த்தார். நானும், ''என்ன செய்வது, ஒரு நாள்தானே! ஒரு நொடியில் போய்விடும்'' என்றேன்.

பின்பு பத்ரி உடற் பயிற்சியின் பல வகைகளைப் பற்றிச் சுவையாகச் சொன்னார். ''உங்களுக்கு என்ன பயிற்சி தெரியும், நான் உங்களுக்குப் பல வகைகளைச் சொல்லித் தருகிறேன்'' என்று அந்தச் சாக்கிலாவது தம் பயிற்சியை முடித்துக் கொள்ளலாம் என்று அவர் ஆரம்பித்ததும்,

''வேண்டாம் பத்ரி, உங்களுக்கு ஏன் வீண் சிரமம்'' என்று நான் தடுத்து விட்டேன். பத்ரிக்கு முகத்திலடித்தாற் போலாகிவிட்டது.

தம் அடுத்த முயற்சியாக, ''சார் எனக்கு ஓர் அவசர வேலை உள்ளது. ஒருவரைப் பார்த்துவிட்டு வரவேண்டும். பத்து நிமிடங்களில் வருகிறேன்'' என்று நழுவப் பார்த்தார். ''பத்துநிமிடம்தானே? நானும் கூட பேச்சுத் துணைக்காக வருகிறேன்'' என்றவுடன் பத்ரிக்கு எரிச்சலே வந்துவிட்டது.

''வேண்டாம். அவர் இருக்க மாட்டார்'' என்று சமாதானம் சொல்லியவாறு திரும்பி விட்டார்.

தொடர்ந்து, சாத்துகுடி, பச்சை வாழைப்பழம், பப்பாளி, திராட்சை, வகைகளைச் சாப்பிடத் தொடங்கினார். சாப்பிட்டவுடன், ''சாப்பாடு ஜீரணமாகக் கொஞ்சம் நடந்து விட்டு வரலாம்'' என்று என்னை ஆசையோடு அழைக்க, நான், ''அதுவும் ஒருவகைப் பயிற்சிதானே! ஊஹூம்! வேண்டவே வேண்டாம்'' என்றேன். பத்ரியின் முகத்தைப் பார்க்க வேண்டுமே!

மாலை மணி ஆறு. நண்பர் ரஸல் மாலையிலாவது பயிற்சி செய்யலாம் என்ற நோக்கத்துடன் வந்தார். பத்ரி தாம் சவாலைச் சந்திக்கப் போவதாகக் கூறியதும், ரஸல் ஆத்திரத்துடன், ''பைத்தியக்காரா! அறிவு கெட்டவனே! மசாலா இல்லாத மடையனே!'' என்று சொல்லியவாறு வெளியேறி விட்டார்.

பத்ரி என்னிடம் ''நல்ல உடற் பயிற்சி காட்சிகள் கொண்ட **Enter the Dragon** படத்துக்குப் போகலாமா?'' எனக் கூற எனக்கும் ஆசையாக இருந்தது. இருவரும் புறப்பட்டோம். போதாத காலம்! டிக்கட் கிடைக்கவில்லை. திரும்பும் போது —

விளையாட்டு மைதானத்தில் சிலர் 'பார்' பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள். இனியும் பொறுக்க முடியாமல் பத்ரி அவர்களோடு கலந்து கொண்டார்.

அனுபவம்: சிக்கி



# கன்னிப் பருவத்திலே.. படவிமரிசனம்

யாருக்கும் அடங்காத காளையை அடக்கும் காளை சப்பையாவுக்கு யாருக்கும் கிடைக்காத கன்னி கண்ணம்மாவின் காதல் கிடைக்கிறது. அந்தக் காளைக்காக அவள் ஏங்கும் ஏக்கம், அவன் காதலைப் பெற்றுக் கணவனாக்கிக்கொள்ள அவள் தவிக்கும் தவிப்பு, நடத்தும் சாகஸங்கள் குறும்புத்தனங்கள் எல்லாம் கிளுகிளுப்பூட்டும் கிராமத்துக் காதல் பூக்கள்!

'ஆண் பிள்ளைன்னு சப்பையா தாண்டா!' இது ஊராரின் பாராட்டு. ஆனால் முதலிரவன்று கணவன் தன்னைக் கட்டித் தழுவும் போதே கண்ணம்மாவுக்கு அந்த அதிர்ச்சி கிடைத்து விடுகிறது - தன்னைத் திருப்திப் படுத்தத் தகுதி இல்லாதவன், தான் காதலித்து மணந்து கொண்டவன் என்ற உண்மை. ஒரு பருவப் பெண்ணுக்கு இதை விடக் கொடுமை வேறு என்ன வேண்டும்? இருக்கிறதே! கணவனின் உயிர்த் தோழனாக, பட்டணத்துப் படிப்புப் படித்தவனாக அழகனாக — ஆசைகளைக் கொள்ளையாகத் தருபவனாக சீனுவின் உருவில் இருக்கிறது.

ஸேபக் ராகா — மலேஷியாவில் பிரபலமாகி வரும் ஒரு விளையாட்டு. வாலிபால் மாதிரிதான் விளையாட்டு ஆரம்பிக்குமுன் தோன்றும். ஆரம்பித்தால் தனிழே! ஆமாம் மூன்று மூன்று பேர் கொண்ட எதிரெதிர் குழுவினர் தலையாலும் காலாலும் பந்து கீழே விழாதபடி எதிரணிக்கு அடித்து விளையாட வேண்டும்.

- ஸன்

- ராமு

கண்ணம்மாவின் கற்பைச் சூறையாட உயிர்த் தோழன் சப்பையாவின் நட்பையே கேடயமாகப் பயன்படுத்திப் பேயாட்டம் ஆடுகிறான் சீனு. முடிவைப் பாரதப் பண்பாட்டுக்குப் பொட்டு வைப்பது போல் அமைத்திருப்பதே கன்னிப் பருவத்தின் களங்கமில்லாத் தன்மை.

கண்ணம்மாவாக வரும் வடிவுக்கரசியின் வடிவம் ஏனோ தானோ என்றிருந்தாலும், நடிப்பு எல்லாக் கட்டங்களிலும் ஏ ஒன்! சப்பையாவாக வரும் புது முகம் ராஜேஷின் வெகுளியான நடிப்பும் தோற்றமும் பாத்திரத்துக்குப் பொருத்தமாக அமைந்துள்ளன. வில்லன் சீனுவாக வரும் பாக்யராஜ், தான் சிறந்த கதை வசன கர்த்தா மட்டுமல்ல, ஒரு சிறந்த நடிகரும் கூட என்பதை நிரூபித்திருக்கிறார். அவரது மணியான வசனங்கள் இப்படத்தின் சிறப்புக்கு முக்கிய பங்கு. நான்கு பாடல்களில் மூன்று இனிமை. அதிலும், 'பட்டு வண்ண ரோஜாவாம் பாத்த கண்ணு மூடாதாம்' கேட்டவர்களை வாய் மூடாமல் முணு முணுக்க வைக்கும். தொய்வில்லாமல் கொண்டு போயிருக்கிறார் இயக்குனர் பாலகுரு. போட்டோகிராபி, ஏனோ நெஞ்சில் பதியும்படி இல்லை. வண்ணப்பதிவும் ரொம்ப டல்!

கிழக்கே போகும் ரயிலிலும், பதினாறு வயதினிலேயும் கண்ட நிறைவைத் தயாரிப்பாளர் ராஜ் கண்ணுவினால் இதில் தர முடியவில்லை என்றால், காரணங்களை ஊகிப்பது ரசிகர்களுக்குக் கஷ்டமில்லை.

**-கௌசிகன்**

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran




கோத்ரெஜ்
அளிக்கும் புதிய

# எவிக்ஸ்

ப்ளூ டிடர்ஜெண்ட்
வில்லை



அழுக்கை அறவே அகற்றுகிறது

பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது

எவிக்ஸ் சக்திவாய்ந்த வெண் பொருள் ஒன்றைக் கொண்டுள் ளதால உங்கள் துணிகள் முன்பைவிட அதிக வெண்மை யையும் அதிக பளபளப்பையும் பெறுகின்றன. நீலம் போன்ற சாதனத்தை இனி நீங்கள் உபயோகிக்க வேண்டியதே இல்லை.

எவிக்ஸ் விசேஷமான முறையில் கலவை செய்யப்பட்டது எவிக்ஸ் ஈரக்கசிவற்றது. கூழ்போல் ஆவதில்லை, பசையற்றது எவிக்ஸ் ஒரே துண்டாக கெட்டியாக இருப்பதால அதை இறுதிவரை உபயோகிக்க முடியும். நீங்கள் அதிகமான துணிகளைத் துவைக்கலாம், கூடுதலான சேமிப்பைப் பெறலாம்.

ஈரக்கசிவற்ற

## எவிக்ஸ்

ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை
நீடித்து உழைக்கிறது

CHAITRA-G 97-TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு